உ

சிவமயம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ

# ஆறுமுகநாவலர் சரித்திரம்.

இஃது

சேற்றூர்ச் சமஸ்தான ஆசாரியரவர்கள்

ஸ்ரீமத் சிதம்பரதேசிகரவர்கள் கட்டளையிட்டருளியபடி

ஷை சமஸ்தான வித்துவான்

இராமசாமிக் கவிராயரவர்கள் குமாரரும்,

திருவாவடுதுறை யாதீனத்துச் சின்னப்பண்டாரச் சந்நிதியாகிய

ஸ்ரீலஸ்ரீ நமசிவாயதேசிக சுவாமிகள்

மாணாக்கரிலொருவருமாகிய

**சிவகாசி - அருணாசலக்கவிராயரால்**

இயற்றப்பட்டு,

திருநெல்வேலிசில்லா ம-ள-ள-ஸ்ரீ, மகாவித்துவான்

**வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்**

பரிசோதனைக்குள்ளடங்கி,

ஷை சேற்றூர்ச் சமஸ்தானம் மானேஜரவர்கள்

**ம-ள-ள-ஸ்ரீ, இராக்கப்ப பிள்ளையவர்கள்**

பொருளுதவியால்,

சென்னை:

அல்பீனியன் அச்சுக்கூடத்தலைவர்

சா. யோ. சவுரியப்பா அவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

உ

சிவமயம்.

## விநாயகர் துதி.

சீர்திகழுங்கலைமதிவேணியன்றானெல்லாம்வல்லசித்தனென்னும் [ன்
பேர்திகழுமிடுகுறியாப்பெற்றனன்காரணகுறியாப்பெற்றதன்றெ
றேர்திகழுமறிஞரெலாங்காணவவன்பூவிரதமிவரச்செய்த [ம்.
கூர்திகழுமொருகோட்டுக்குஞ்சரத்தினடிமுடிமேற்கொண்டுவாழ்வா

---

## முருகக்கடவுள் வணக்கம்.

வகையறுமாமலைமலையாப்பகைபெருக்கமிகவருந்துவதுகண்டோர்
பகையுமிலையிந்திரனுக்கெனவசுரர்குலமறுத்துப்பதியும்வாழ்வு [மாய்
மிகையுமுதவியதற்கோர்கைம்மாறுவவன்றவத்தான்மேனாட்பெற்ற
தகையுறுபூவகொடியையமணஞ்செய்தவேறருமானிருசரணங்காப்பாம்.

---

## குருவணக்கம்.

கலித்துறை.

அம்பலவாணயனமெனுமாதரவாமலியும்
அம்பலவாணவமுற்றேனையாட்கொண்டருள்புரியும்
அம்பலவாணர்பரவுந்துறைசையமரருட்சீர்
அம்பலவாணகுருபரன்செம்பொற்பதாம்புயமே.

---

## வித்தியாகுரு வணக்கம்.

வேறு.

சத்தசத்துணராவிந்தச்சழக்கனைத்தன்பாலாக்கி
யித்தரைதனிற்போதித்தானெவனவனெல்லாம்வல்ல
சித்தனென்றிடவெற்குண்மைதெருட்டுசீர்திகழ்கோமுத்தி
முத்தனாமசிவாயமூர்த்திதாண்முடியுள்வைப்பாம்.

# இந்நூல் வரலாறு.

நிலவுலகிலொருமதியநிலவியதென்றேநிகழ்த்தப்
பலகலையுநிரம்பியாழ்ப்பாணமெனும்பாற்கடலி
லிலகியெழீஇநாவலரென்றியம்புபெயரேவாபெறினுங்
குலவுதமையேகுறிக்கக்கொண்டபெருங்குலப்புகழோர். (௧)

தண்ணியசீர்தருசைவந்தழைத்தோங்கித்தலையெடுப்ப
வெண்ணியசற்சாத்திரநூலனைத்தும்வெளியேறியெங்கள்
புண்ணியமேயெதிர்வந்தாற்போலவந்துபோதிக்கு
நண்ணியமெய்யாறுமுகநாவலர்நற்சரிதம். (௨)

வசனநடையிற்சிறிதுமழுவாதுரைந்தறியா
* உசனனபொன்னவிர்விழுத்தலோரனைய வுயர்கவிக
ணிசமிகும்யாழ்ப்பாணத்தினின்றனுப்பநோந்தேவரும்
விசனமறவாங்கியிதுமெய்யெனனமிகவியந்தார் (௩)

அன்னவருட்பாண்டிநாட்டமாசேறையம்பதிக்கு
மன்னவனசுந்தரதாசமகராசபோசவள்ள
லென்னரியதந்தையிடத்தினறம்மூந்தரிறைவனிவன்
றன்னரசுதழையவருடருங்குருவாமொருத்தகோர். (௪)

கருணையோருருவாகிக்கண்ணோட்டங்கட்கணியாம்
பொருளனைக்கொண்டாகப்புறப்பொருளெலாம்போதவுணர்
தெருள்புனிதசீலசைவசித்தியபரதேசிகரெனபா
ரிருமையுநற்பயனுதவுமிவ்வசனமென்றருளி. (௫)

எத்தனையோவுயர்கவிஞரிருக்கவுங்கற்றிலாவெனைத்தம்
பத்தரொடுசேர்க்கவுளம்பதித்தோர்பாடுவா
யுத்தமமாஞ்செய்யுணடையொழுங்காகவெனவொருவாக்
கித்தரையிலருளிஞரிதைமறப்பாரெவரம்மா. (௬)

அத்தகுவாக்கேதுணையாவடியனேன்சிற்றறிவிற்
கொத்தபடிபாடலுற்றேனுளங்கொள்கவுயரறிஞர்
சுத்தமிகுபொருட்சுவையுஞ்சொற்சுவையுஞ்சோர்வுறினுஞ்
சித்தம்வைசநிலைபெறற்குச்செய்யுணடைசிறந்ததென்றே. (௭)

* உசனன் — சுக்கிராசாரியன்.

# இந்நூலச்சியற்றுதல் வரலாறு.

---

தேடிவைத்தபுதையலெனவாறுமுகநாவலன்சீர் தெரிந்து நம்
மோர், பாடிவைத்தசெய்யுணூல்கண்டெடுத்துப் படித்தோர்பற்பலருஞ்
சென்னி, சூடிவைத்தமகுடமெனக் கொளலாகும்பொருளிதெனச்
சொல்லிப்பன்னாட், கூடிவைத்தபேரன்பாலாயிரம் புத்தகமாக்கிக்
கொடுத்தான்மன்னோ. (க)

செயற்கரியசெய்வர் பெரியோரென்ன வள்ளுவர்முன்செப்பற்
கேற்ப, வுயற்கரியவுறுதிபெறவிவ்வுதவிசெய்தவன்யாருணர்த்தாயெ
ன்றாற், கயற்கரியகண்ணியரசொடுமுடியுஞ் செங்கோலுங்கைக்கொ
ண்டநாண், மயற்கரியமால்பிரமன்காணரியானரசுசெய்தவழுதிநாட்
டில். (உ)

ஓங்குபுகழ்வளரும்வெங்கடேசுரெட்டணிளசைநகருயர்வேளா
ளர்,பாங்குபெறுகுலத்துதித்தோன்சைவநெறிவழாதுபத்திபழுக்குஞ்
சீலன்,தாங்குமதியூகிதமிழுணருமென்போல்வார்க்கெலாந்தருவேவான்
விட், டங்குமனுவுருவெடுத்துக்கொடைதரவந்தாற்போலுமென்னும்
வள்ளல். (௩)

வேற்றாருந்தம்மூராய்விடவணந்தங்கலைதேர்பாவேந்தர்மல்குஞ்,
சேற்றாருமெழுமலையுமானேசரதிகாரஞ்செலுத்துந்தென்றற், காற்றா
ருமதனிகரும்பேரெழிலாரொருநால்வர்கட்குமுன்ன, மாற்றாருமம
ர்ந்தபிரான்கழலேத்தும்பெருஞ்செல்வமமையப்பெற்றோன். (௪)

இந்தவிருநகர்க்கு மொருபேரரசாஞ்சுந்தரதாசேந்தலென்பான்,
சொந்தமிகும்பிரதிநிதியாகியிந்நாளரசுபுரிதுரையென்றோத, வந்தவ
னும்பேரைநகர்நாகயசாமிக்கோமான்மனத்துளன்பு, தந்தமதிமந்திரி
யாய்விளங்குமிராக்கப்பனெனுந்தமிழ்வல்லோனே. (ரு)

# சாற்றுக்கவி.

---

திருநெல்வேலி ஸ்ரீ அனவரததானநாதர்வாயில்

மகாவித்துவான்

ம-ள-ள-ஸ்ரீ நெல்லையப்பன் கவிராஜரவர்களியற்றியது.

செந்தமிழின் வரம்புணருந் தென்பாண்டிவளநாட்டிற் சேற்றூருக்கு
வந்தமுகமெனுமுகவூரிராமசாமிக் கவிப்பாவல்லோனன்பிற்
றந்தமகார்மூவருக்குண் முதல்வனாய்ப் பலகலையுந்தவமேலோங்கப்
பந்தமகற்றிடுந்துறைசைப் பதிநமசிவாயகுருபரன்பாற்கற்று. (௧)

சிவகாசிவாசியாய்ப் பதிற்றுப்பத்தந்தாதி திரிபந்தாதி
யுவமானமில்லாதபுராணமுடன்மாலையதற்குஞறறிமேலாந்
தவமாகுந்திருப்பரங்குன்றத்துறையுமுருகர்பிள்ளைத்தமிழும்பாடிப்
பவமானதறத்திருச்செங்கோட்டந்தாதியும்பாடிப்பரவச்செய்தோன்.

ஆயதமிழ்த்திறமைமிகவருமருணாசலக்கவிகேளகிலமெல்லாந்
தூயநயகவிப்புலவர்தமைநிறுக்குந்துலையென்னத்தோன்றுகின்ற
ஞாயமிகுயாழ்ப்பாணநல்லூர்வாழாறுமுகநாவலன்சீர்
பாயசரித்திரஞ்சொற்றனவன்புகழ்போலிவன்புகழும்பரவற்பாற்றே.





சிவமயம்.

# யாழ்ப்பாணத்து நல்லூர்
## ஸ்ரீ ௵ ஸ்ரீ
# ஆறுமுகநாவலர் சரித்திரம்.

## நூல்.

கங்கைசேர்முடியிறைவன்றிருவருளேபொருளென்னக்கலைகளாலோ
தங்கைசேராமலகமெனத்தெளிந்தன்பொருவடிவமாகியென்று [ாங்
நங்கைசேராசையொழிநைட்டிகமாராறுமுகநாவலர்பூ
மங்கைசேர்நல்லூரிலவதரித்ததாதியசீர்வழுத்தல்செய்வாம். (௧)

## வேறு.

இலங்குமீழப்பொன்னெனும்பரியாயத்தாலின்பந்
துலங்குபூந்திருமடந்தையாழ்ப்பாணம்பஃறுதியு
மலங்குமனைவட்குயர்வலக்கண்ணதன்மணியா
நலங்குலாவியபேரொளிவிளங்கியநல்லூர். (௨)

கலைநிரம்பலாற்காசினிதனக்குயர்வான
நிலையடைந்திடுதெளிவினூற்றண்ணியநீரா
லுலைவில்வெண்மதியொத்ததாயினுநல்லூர்க்கோடி
யலைவிலாமையுமுண்மறுவிலாமையுமதிகம். (௩)

பாடுபெல்கலைச்சங்கமுமேயுமின்பவள
மூலொய்த்தழையுந்திருப்பெறுங்கனமுற்று
நீடுமின்பயன்படுநிலமடுக்குமிந்நீரா
னுடுபொற்கடல்போன்றதியாழ்ப்பாணத்துநல்லூர். (௪)

மாறுதீரிறைமாசிலையாவுறவளையு
மேறுபல்லுயிர்க்காசையேமிகவிளைத்தெழுநல்
லாறுகாட்டுநாவலரையுந்தாங்குமிவ்வழகா
னறுபூம்புகழ்மேருவேயென்னலாநல்லூர். (௫)

புகழ்வலாரியங்கூர்தருகணந்தெரிபுலவர்
நிகழ்தல்கற்பகத்தையலர்நிறைதனன்னேய
மிகழ்விலெவ்வகைப்போகமும்விளைதலாமியல்பா
லகழ்சுலாவுநல்லூரொருபொன்னுலகாமால். (௬)

தேருமின்படைசத்தியங்கைவசஞ்செயலா
லாருமிச்சிகாவளமுறவேறலாலந்தங்
கூருநல்விருமாதரைமருவுசீர்கொளலா
னருலாங்குமரனையுமேநிகர்ப்பதுநல்லூர். (௭)

குலவுசங்கமங்கைப்பற்றஞ்சக்கரங்கொள்வார்
நிலவுமேன்மையால்வைகுந்தநிகர்க்கினுநீதி
பலவுலாவுநல்லூரினிற்படியளப்பார்க
ளலகிலாரங்கணொருவனேயவனுமாலானேன். (௮)

மயர்விலாமலெந்நன்மையுமலிதலால்வல்லோ
ருயர்வினோங்குமிந்நகரநல்லூரெனவுரைக்கும்

பெயரினுண்மையேமான்மியமுழுவதும்பேசு
மயர்வுசான்றநாமினைத்தெனப்பாடுவததிகம். (௯)

## வேறு.

ஆயவிந்நகரில்வாழ்வாரகிலம்யாவையுங்கைம்மாறு
பாயமுங்கருதாதென்றும்பாதுகாத்திடுங்கார்காத்த
தூயவேளாளரன்றோதொல்குலம்விளங்கத்தோன்றும்
வாயமைசீர்சால்பாணடிமழவர்தங்குடியேயல்கும். (௧௦)

மல்குமக்குடிமுன்செய்தமாதவத்தாலேயன்பு
பில்குமெய்ப்பொருள்சேர்ஞானப்பிரகாசரெனும்பேர்பெற்றுத்
தொல்குலக்கொழுந்துபோலத்தோன்றினரொருவர்யார்க்கு
நல்குமிப்பெரியர்தஞ்சீர்நவின்றிடவல்லர்நாமோ. (௧௧)

ஆயினுமாசையாற்சற்றறைகுவமறத்தாறன்றிப்
பாயிரும்பறங்கிக்காரர்பற்றியாழ்ப்பாணம்வாழ்நாண்
மாயிருங்குடிகாளெங்கோமானுணவழங்கல்வேண்டு
நீயிரும்பசுவொவ்வொன்றுநோமெனநிருமித்தாரால். (௧௨)

என்செய்வோமென்செய்வோமென்றிரங்கியக்குடிகளெல்லா
முன்செய்தீவினையென்றெண்ணிமுறைமுறைகொடுபோய்முன்றந்
தின்செயலொன்றுந்தேராதிருக்குநாளிவர்நாளெய்தப்
புன்செயலீதுநாமும்புரிவதுதகாதுபோலும். (௧௩)

என்றுனைந்துருகியாவொன்றிந்நகர்க்கிறையாமீனன்
கொன்றுசாப்பிடும்பொருட்டுக்கொடுக்கினும்பாவங்கூடு
மின்றுநாமொருவர்காணாதிவண்விட்டேகுதலேநன்றென்
றன்றுதாமிரவிலேகியருட்சிதம்பரமடைந்தார். (௧௪)

அத்தலத்துள்ளதீர்த்தமாடிநீர்மிளகருந்திப்
பத்தராம்விரதம்பூண்டுபோசித்துநாற்பத்தைந்து
வைத்தநாளம்மைகோயின்மருங்கிருந்தருள்கைவாங்கி
யுத்தரதேயர்தன்னிளையர்கௌடத்தையுற்றார். (௧௫)

மறைமுனியொருவராங்குமகார்க்குமீமாஞ்சைதர்க்க
முறைவியாகரணமாதியோதுவித்திடல்கண்டுள்ள
நிறைதரவவற்றைத்தாரநின்றுநித்தியமுங்கேட்பர்
குறையறுமிவரைநெஞ்சுட்குறித்தொன்றுமவருங்கூறார். (௧௬)

அந்நிலைநிசமுநாளிலனையவாசிரியர்கற்பார்
தந்நிலைசோதிக்குங்காற்றரும்விடைதராதுநின்றா
ரிந்நிலையுணர்ந்துதூரத்தெய்திநின்றிடுமிம்மேலோ
ரெந்நிலைமையுந்தேர்ந்துள்ளாரென்றழைத்தியம்பலுற்றார். (௧௭)

இங்குநீவர்தநாடொட்டெம்மிடங்கேட்டவெல்லாந்
தங்குமாறியம்புகென்னத்தாந்தெரிந்தவைகண்முற்று
மங்குமாணாக்கருள்ளமதிசயித்திடச்சொற்றார்தேர்ந்
தெங்குநுண்ணறிவின்மேலோரேயுயர்ந்தனரென்றெண்ணி. (௧௮)

போதகர்நீயேமேலாம்பூசுரனெனப்புகழ்ந்து
பேதமிலாமன்ஞானப்பிரகாசர்தமக்குப்பின்ன
ரோதலாமுறைசற்பித்தாருயரறிவுறுமாணாக்க
ராதல்கண்டனரேற்கற்பியாதெவரிருப்பரம்மா. (௧௯)

வேதமீமாஞ்சைதர்க்கம்வியாகரணங்களாதி
யாதரவாகக்கற்றாரதற்பினாசிரியரையா
நீதமிழ்நாடுசேர்வாய்நிறைபயனங்குநின்றோர்
மேதகவெய்தவென்னவிடைகொடுமீண்டுசேர்ந்தார். (௨௦)

சேர்ந்தபின்புயர்வொப்பில்லாத்திருவண்ணாமலையாதீனஞ்
சார்ந்தருண்மயமாஞானாசாரியன்றன்பாற்காவி
யார்ந்ததூசேற்றுச்சந்நியாசமுற்றருட்சித்தாந்தங்
கூர்ந்தநூல்பலதெளிந்துகொண்டனர்குறையொன்றில்லார். (௨௧)

பின்னருஞ்சிதம்பரம்போய்ப்பிரிவிலாதுறைந்தியாரு
முன்னரும்வடநூறன்னிலுளபவுட்கரமுன்னூல்கீ

ளின்னரும்வியாக்கியானமெழுதியுமதிற்சின் னூல்க
ளென்னரும்வியக்கச்செய்துமிருந்தனரிம் மட்டேயோ. (உஉ)

சேர்க்குமேலான வின்பந்திகழ்சிவஞானசித்தி
யார்க்குமோருரைசெய்தப்பாலவையெலாந்தமதாதீனத்
தோர்க்குமேதகவுண்டாகவொப்பித்தாரங்கணோர்ந்து
பார்க்குநீர்மையரெல்லீரும்பார்மின்கற்பனையீதன்றே, (உ௩)

தெரிதருமினையநூலாசிரியர்பின்சிதம்பரத்தி
லுரியதம்பெயராலோங்குமொருதிருக்குளமுள்ளன்பா
லரிமுதலோருந்தீர்த்தமாடுவானமைத்தாரென் றும்
பெரியதாமதுவேஞானப்பிரகாசமெனப்பிறங்கும். (உ௪)

இவர்சிதம்பரமேட சரிருஞ்சரணிடைப்புகுங்காற்
கவர்தருவரத்தினாலோகருதுதம்மரபிற்கற்ற
தவர்பலர்முன்செய்மெய்ம்மாதவத்தினோதமக்குப்பின்சா
ரவர்பலருளுஞ்சிறந்தோராரயவர்கந்தரென்பார். (உ௫)

அனையரில்லறத்திற்சேற்குமருட்சிவகாமியாரா
மனைவியர்தமைமணந்துமனையறம்பூண்டுவாழ்நாட்
டனைநிகர்சைவமோங்கத்தமிழ்தலையெடுப்பத்தாமே
புனையும்வேதாகமங்கள்பொற்பொடுபொலியமன்னோ. (உ௬)

அருட்படுசைவமன்றியகன்புறச்சமையமாங்கா
ரிருட்படுகுழியில்வீழ்ந்தாரினிவிழுநினைவாரியாருந்
தெருட்படும்வகையீடேறச்சிவமயமெங்குந்தேங்க
மருட்படும்சமயவாதம்வலியழிந்தோடமன்னோ. (உ௭)

புவிபுகழ்சிவபுராணபோதநூற்பொருடெரிந்து
குவிமனங்குதுகலிப்பக்கொளுங்கழகங்குலாவச்
செவியினுற்பெயருங்கேளாத்திறன்மறைந்திருந்தசீர்சால்
கவிஞர்நூலுரையனைத்துங்கற்றிலார்தாமுங்காண. (உ௮)

கற்றலுங்கற்றற்கேற்பக்கருதுநாற்பயன்கைக்கொள்ள
நிற்றலுமிவைபிறர்க்குநினைவினினீங்காவண்ணஞ்
சொற்றலுமிவையேகற்றதூயவர்க்கழகாமென்ன
முற்றலுமெம்போல்வாருமுன்கண்டிம்முறையினிற்ப. (௨௯)

சைவமேசிறுத்துஞ்சைவாசாரியர்நால்வரோடுங்
கைவருமெந்தநூலுங்கண்டுரைகற்றோர்க்கின்பஞ்
செய்வகையெழுதவல்லாசிரியர்கணால்வரோடு
மைவராமென்னயார்க்குமதிசயமதிகமாக. (௩௦)

இன்னமுமின்னவின்னவென்றிடப்படாதநன்மை
யென்னவுநாளுநாளுமெழீஇத்தலையெடுப்பயாமேற்
சொன்னவோர்கந்தரெனனுந்தூயருந்துணையாநிற்கு
மன்னமன்னவராங்கற்பினருட்சிவகாமியாரும். (௩௧)

திருவமர்காதலான்முன்செய்தவப்பயன்றிரண்டு
கருவமர்தாலுமுள்ளங்கசிந்தெனக்குருகிக்காணும
பருவமாதிரண்டுந்தாங்கிப்பாரெலாம்பரவும்பால
ரொருவரைப்பெற்றார்யாண்டுமுயர்தவமபோலொன்றுண்டோ. (௩௨)

பிறந்தவப்பொழுதேமைந்தர்ப்பெற்றவர்முன்னம்பெட்பாற்
சிறந்தமாதவமென்செய்தார்தெரிந்தவர்செப்புவீரென்
றுறந்தவன்பெழீஇக்குழீஇயவொவ்வொருவருமேதம்மை
மறந்தனர்களிப்பின்மூழ்கிவலப்புயந்துடிக்கமன்றே. (௩௩)

மைந்தர்தோன்றியநாள்சாலிவாகனசகாத்தமென்னு
மந்தமாயிரத்தேழ்நூற்றுநாற்பத்தைந்தெண்ணினொடு
வந்தசித்திரபானுற்றமார்கழிமதியைந்தேதி
சிந்தவில்புதனிராவிற்சிங்கலக்கினஞ்சிறக்க. (௩௪)

உதயலக்கினத்திற்கைந்திலுதையன்சேய்புந்திசுக்கன்
றதையுறுமிராகோராறிற்சந்திரனேழிற்சார்மன்

ப்பைதபுகழ்சனியொன்பானிற்பத்தினிற்பொன்பன்னொன்றிற்
சிதைவறுகேதுகூடித்திகழ்ந்தனர்சிறந்துதோன்ற. (௩௫)

பூருவபக்கத்தைந்துபொருந்தியதிதியவிட்டம்
பாருறுகரணந்தன்னிற்பாலவகரணம்பார்க்கி
லோருவமையுமில்வச்ரயோகமுமொன்றுகூடிச்
சீருறுசுபநாமொன்றுதெரிந்தனர்தெளிந்தமேலோர். (௩௬)

ஜுவையெலாஞ்சாதகன்மமெழுதுவோரெழுதச்செய்து
சுவையுணவூட்டலாதிசொற்றிடுங்கருமம்யாவை
யவைமுழுதுரியகாலத்தளவிலாச்சிறப்பினான்றோர்
சவைபுகழ்தரவியற்றலசாற்றலாந்தகைமைத்தன்றே. (௩௭)

மைந்தரைக்கண்டார்கேட்டார்மகிழ்ச்சிபன்மடங்குபொங்கிச்
சிந்தனைக்கெட்டாதென்றாற்செய்தவப்பயனாலீன்ற
தந்தைதாய்மகிழ்வெறாமோசனையரைப்பயந்தார்தம்மு
ளிந்தநல்லிருவர்போனமற்றெவர்பெற்றாரியாண்டுமின்றே. (௩௮)

உலகினிற்பெறுமவற்றுளுயரறிவுறுமகார்போ
னலமுறுபேறின்றென்றுநாயனார்நவின்றதுக்தப்
பலமுறுபாலர்போலும்பாலரையென்றுபார்மேற்
சிலரன்றிப்பலருங்காணத்திகழ்ந்தனர்சிறப்பினன்றே. (௩௯)

அகலிடமெங்குஞ்சைவமாக்குசம்பந்தனாரைப்
புகலியிற்பெற்றாரிந்தப்புதல்வரைப்பெற்றார்போல்வ
ரிகலிலாக்கல்விகேள்வியிருஞ்சிவபத்தியாதி
மிகலினாலெங்குஞ்சைவவிளக்கஞ்செய்வித்தான்மன்னோ. (௪0)

முருகவேள்கொண்டவாறுமுகமெனமொழிபேர்தாங்கற்
கருகராம்பாலரென்றேயறிஞரிட்டழைத்துள்ளன்பு
பெருகமாமகிழ்ச்சிகூர்ந்தார்பிதாவினும்பிறைபோனாளு
மொருகலையேனுமின்றியோங்குபுவளர்தலுற்றார். (௪௧)

## வேறு.

முத்தியாரம்பராபரன்மொய்கழற்
பத்தியாரம்பலபுனையாதம
னத்*தியாரம்பருடலினம்மைந்தர்
வித்தியாரம்பமேவல்விளம்புவாம். (சஉ)

ஓங்குமைந்துபிராயம்வந்துற்றிடத்
தாங்குமைந்துதருங்கலைதந்தையார்
தோங்குமைந்தறதோன்றுநல்லோரையி
லாங்குமைந்தருணரவமைத்தனர். (சங)

உன்னுமைந்தர்க்குணாதிடவல்லனும்
பின்னுசீர்ச்சுப்பிரமணியன்பெய
ரன்னுமாசிரியன்னிடத்தின்புடன்
மன்னுபல்கலைகற்பாரவுழுவற. (சச)

கற்குங்காலத்திலேதமிழ்க்கல்வியுண
ணிற்குமாறுநிரமபககற்பேனெனுரு
சொற்குன்றுதநல்வாஞ்சையுட்சோரவிலா
மற்குனருமெனவோங்கிவளரவே. (சரு)

வாக்குண்டாமுதனீதிவரம்பினை
யாக்குநூல்களுமாயுங்கணிதமு
நோக்குமெய்ப்பொருட்கும்பேர்நுவன்றிடு
தேக்குசீரிகண்டுந்தெளிந்தார்செல்வர். (சசா)

தெரியுமின்னவைகற்றுத்தெளிந்தபின்
பரிவுமேவியநைடதம்பாரத
மரியகாந்தமறைசையந்தாதியா
முரியநன்னூலுரைகேட்கலுற்றனர். (சஎ)

கேட்டசெய்யுட்பொருளைக்கிளர்நெஞ்சுள்
ளேட்டகத்தினெழுதுவரீதன்றி

* தியார் குறுக்கல்விகாரம்.

வர்ட்டமேவிமறந்துமயங்கியு
மீட்டறிந்திலர்யாரையும்வேண்டியே. (சஅ)

கூடக்கற்குஞ்சிறுர்க்குந்தங்கோட்பொரு
ணீடக்கற்பிப்பர்நேர்விளங்காமந்த
மூடப்பிள்ளைகட்குப்பன்முறைபின்னு
நாடப்போதிப்பர்சோர்வின்றிநாடொறும். (சகூ)

தம்மைப்போற்பிறர்தம்மனந்தன்னையுஞ்
செம்மைத்தாக்குஞ்செயலினராய்க்கல்வி
யிம்மைக்கும்பயனென்றுமறுமைக்கு
மெய்ம்மைத்தாம்பயனென்றும்விளக்குவார். (ருo)

ஓதினாரொருநாளுமுளத்திறும்
பூதியன்றபுகழ்பொருள்பூசைமுன்
ஞுதியாமிவையொன்றுமடைந்திலார்
நீதியாமென்றவர்க்குநிகழ்த்துவார். (ருக)

புத்திநாடொறும்யார்க்கும்பொருந்தப்போ
தித்திடும்மிவர்செய்கைகண்டோரெலா
மித்திரத்தநன்மைந்தரையீன்றிடு
மெய்த்திருக்குலமேவிளங்குமென்பார். (ருஉ)

வேறு.

அமைதருகல்விகேள்வியான்றதன்றம்பியார்தங்
கமையறிவடக்கம்வாய்மைகண்டுளங்களித்துமூத்த
தமையனுந்தியாகராசசற்குணசாலியன்பு
சிமையமாமலைபோலோங்கச்செலுத்தினனிளையசெய்தான். (ருங)

விளையுமின்பயிரைநாளுமெய்தெரிவார்மேற்றோன்று
முளையிலேதெரியுமென்னுமுதிர்பழமொழியுள்ளோர்ந்துள்
ளளையுமன்பமையுநல்வேலாயுதனெனும்பேரண்ண
லுளையுயர்கல்விதேறற்கொப்பித்தானிளையார்தம்மை. (ருச)

அன்னவன்றனதுமைந்தனனசம்பந்தனோடு
மின்னமைந்தரையும்வைத்தேயிலக்கணவிலக்கியங்க
ளென்னரும்வியக்குமாறங்கெளிதினிற்கற்பித்திட்டான்
பன்னரும்வயசப்போதுபன்னிரண்டாயிற்றன்றே. (ருரு)

ஈதுதேர்முன்னோன்றம்பியிளையவனெனினுமூத்தோ
னோதுநூற்கல்வியாலென்றெப்புயர்விவனுக்கிங்கே
யேதுநாவீராசபாஷையென்னுமிங்கிலிசுமேயிப்
போதுகற்பிப்பேனென்றுபொருவிலாமகிழ்ச்சிபூத்து. (ருசு)

ஆற்றருமன்பாலந்நாளங்கிலவித்யாசாலைப்
பேற்றர்பார்சிவலெனும்பேர்பெற்றபாதிரிபாற்பேணு
மேற்றமாரிவரையுய்த்தங்கெளிதினிற்கற்பித்திட்டான்
சாற்றருமதுநிரம்பத்தாங்கற்குந்தையர்தாமும். (ருஎ)

இன்னுஞ்செந்தமிழேநானுமேற்றமாக்கற்கவேண்டு
மென்னும்பேராசையாலேயியன்றசேனுதிராயன்
மன்னுஞ்சீர்க்கல்விகேள்விமலிசரவணமுதசென்னத்
துன்னும்பேரவனும்பாடஞ்சொல்லுமாசிரியராக. (ருஅ)

கற்றனர்தெளிவாநன்னூற்காண்டிகைவிருத்தியோடு
மற்றிரகுவமிசஞ்சீவகசிந்தாமணிமுன்னோத
லுற்றவைங்காப்பியங்களுயர்திருக்கோவையார்சீர்
பெற்றவள்ளுவரேயாதிப்பெரியநூல்பலவும்பின்னும். (ருகூ)

இவ்விருகலைகடம்மிலிவர்க்கிணையில்லையென்னச்
செவ்விதினுணர்ந்துபின்னர்ச்சிவபுராணங்களெல்லா
மௌவியமில்லாமேலோராலயந்தனிலருத்த
மெவ்விதஞ்சொல்கின்றார்கேட்டிடுவமென்றெண்ணிச்செல்வார். ()

சென்றுகேட்டிடுமப்போதாட்சேபத்துக்கிடமாயுள்ள
தொன்றையும்விடாமலெண்ணியுயர்பிரசங்கியாரை

நன்றுறுமுடிவிற்கேட்பர்நன்கவர்நவின்றாற்கொள்வ
ரின்றெனிற்றக்கவாறங்கின்பொருள்விளக்கியீவர். (௬௧)

தேர்சிறுபருவத்தேயித்திறம்பிறர்தெரியாரென்று
பார்சிவலறிந்திரண்டும்படிப்பிக்கும்படியேவேண்டக்
கூர்சிலகாலம்வேண்டுகோளுக்காக்கூலிகொள்ளா
* தேர்சிறார்பலர்க்குங்கற்பித்திட்டனரிணையிலாமல். (௬௨)

ஆயநாள்பத்தொடொன்பதாண்டவர்வயசியாழ்ப்பாணம்
பாயவைப்பெங்குமெல்லாம்படித்தனரிவர்க்கொப்பாக
வேயசீரறிவின்மேலோரிலையெனும்பெயரேயாக
மேயபார்சிவலுந்தேர்புவியந்துவிம்மிதமேற்கொண்டான். (௬௩)

கொண்டிவாதம்மாற்பைபில்குணப்படத்தமிழிற்றற்குப்
பண்டிதராகவைத்துப்பைபிலைப்பலவுமோர்ந்தே
யெண்டிசைபுகழுமாறங்கியலினிற்றிருத்துமென்றான்
றெண்டிரையுலகோர்மெச்சத்திருத்தினார்திருத்துங்காலை. (௬௪)

வைவகலாக்கிறித்துமதமெங்கும்பரவவாய்மைச்
சைவமாமதஞ்சுருங்கத்தாங்கண்டுதெரியாராகி
யைவரையடக்குஞ்சீர்ச்சித்தாந்தநூலனைத்துங்கற்று
மெய்வருமுளந்தெளிந்தார்மிகவுமுன்னையின்மேலாக. (௬௫)

உவமையில்கருணையாலேயுயிர்கட்குப்பொதுச்சிறப்பாச்
சிவபிரானருள்செய்வேதசிவாகமந்தெளியவேண்டி
யவசியம்வடநூலெல்லையறிந்தவையுணர்ந்தவற்றின்
றிவள்பொருளெனத்தேவாரதிருவாசகமுந்தெளிந்தார். (௬௬)

ஆயவிக்கலைகண்மூன்றுமறிந்துயர்ந்தனரதன்றி
யேயசாத்திரங்கட்கெல்லாமிறையவரிவரேயென்னத்

---

* ஏர்சிறார்-எதுகைநோக்கி யியல்பாயிற்று.

தூயபேர்பரவயாருந்தோத்திரஞ்சொலித்துதித்துப்
பாயநல்விடயம்யாவும்படித்திடததலைப்பட்டார்கள். (சுஎ)

அண்டவோர்தங்கட்செல்லாமரனுயிரமம்விடாமன்
மண்டபாவஞ்சுலர்க்கநரகொடுமைறுபிறப்பு
முண்டுநீர்காண்மினென்றுவுணர்ததிறூருணர்ந்தோரீது
பண்டுநாங்கண்டுங்கேட்டும்படித்திலோமெனப்பயின்றார். (சுஅ)

இன்னநூன்முழுதுமெங்கேயெவரிடத்தென்றுகற்று
றென்னவாச்சரியமெய்தியிவரிடத்தன்பெல்லாரு
முன்னம்வைத்ததற்குமேல்வைதவொழுகுதனமுறையென்றோர்ந்தா
ருன்னருமறிஞர்பாலன்புறுவறிவுள்ளோராயோர். (சுகூ)

இப்படிநிகழுங்காலத்திருபதோடிரண்டுசேர்ந்த
வொப்பறுபிராயமெய்தியுயர்பயனுலகமெய்தத்
தப்பறுகருவிநூல்கள்சமயநூலோடுதாமே
செப்பமாச்சிறார்சிலோரைச்சேர்த்துபதேசித்திட்டார். (எ0)

வேதனைப்பெறுதிவ்வாறுமேம்படக்கற்பிப்பாராம்
போதகர்தமைச்சென்னைக்குப்போய்வரவழைத்துப்போனான்
பாதகமிலாமலச்சிற்பையிலைப்பதிக்கவேண்டி
மாதமிழ்விருப்பும்பாசிவற்பெயர்வாய்ந்தோன்மாதோ. (எக)

வேறு.

சென்னைநகர்சென்றவுடனங்குள்ளாரிவர்வரவு தெரிந்துகொண்டு, முன்னையாழ்ப்பாணத்திற்றமிழறிஞராரியரெந்தமுறையாற் பைபி, றன்னையிவர்திருத்திறூரிங்குளபண்டிதர்சமுகந்தனில் வாசிக்கிற், பின்னையிதுபிழையிலையென்றெப்பேறிலச்சியற்றப் பெறுமேயென்றார்.

இவையெல்லாங்கேட்டபார்சிவலுள்ளந்தளர்ந்துதனதியல்வல்லாரை, யவையிலராங்கேற்றுங்கானன்குமதித்துச்சரியென்பாரோவன்றி, வழுவையென்பாரோ வென்னநாந்திருத்துமிதுவோது நவின்றாராயிற்,

ச்சுவையுறுசெந்தமிழ்மேற்கோள்காட்டியொப்பேற்றுதுமென்னத்து
ணிந்துசொன்னார். (எ௩)

அப்போதுசிறந்தவித்துவான்மகாலிங்கையரவரையன்றோ, ரிப்
பாதுநீவிரிவர்திருத்தியபைபிலைச்சரிபார்த்தியம்புகென்ன, வொப்
பாதும்படிமுழுதும்பார்த்ததுமிகவசனநடையுயர்ச்சியுற்ற, தெப்போ
துமிதுபோலத்திருத்தமுறுதிவ்வாறச்சிடுகவென்று. (எச)

தெள்ளுதமிழ் யாழ்ப்பாணத்தினிறசிறந்ததினியிவராற் சிறப்பு
மேன்மே, லுள்ளுறவோங்கிடுமென்னவோ,நினர்யாவருமொப்பலுற்ற
தோர்ந்து, நள்ளுறுபாதிரியாரும்பண்டிதருமச்சியற்றிநகரநீங்கி, யள்
ளுறுகாதலின்விரைவின்யாழ்ப்பாணம்வந்தினிதங்கமர்ந்தாரப்பால்.()

தம்முடன்கற்றுரிருவர் சின்னப்பா இல்லைநாதப்பேர்பூண்டோர்,
மம்மர்மதியாற்கிறித்துமதப்பிரவேசஞ்செய்யமதித்ததோர்ந்தங், கம்ம
வதுபொய்ம்மதமாஞ்சைவமேமெய்ம்மதமெனறனந்தமாகத், தம்மதி
யாற்றிட்டாந்தமுடன்காட்டித்தடுத்தனரததடுத்தசெய்தி. (எகூ)

தம்மைப்பண்டிதராகப்பெற்றபார்சிவலறிந்துதகுதியாநீர், செம்
மைப்பண்பினரிருவர்தமைத்தடுத்ததெலனவினுய்ச்சினவம்போதி, வி
ம்மைக்கும்பயன்மறுமைக்கும்பயனுஞ்சைவசதினியல்புகாட்ட, வெல
ம்மைக்குங்கடமைநமக்கினிநும்பாற்பண்டிதராயிரேனென்றிட்டார்.

பாதிரியங்கிவர்வைராக்கியமுணர்ந்துதனதுமதம்பரம்பச்செய்த
ற், கேதிரிவர்வாயடக்கும்பகையெனினுந்தமிழ்போதித்திடுதற்கிந்த,
மாதிரியோர்பண்டிதரைப்பெறலரிதாதலின்மிகச்சமாதானஞ்செய்,
தாதிரிலோகமும்புகழுநீர்பொறுத்திங்கிருக்கவெனவன்பின்வேண்ட.

பின்னுமதற்குடன்பட்டுப்பரசமய விருளகற்றும் பெருஞ்செஞ்
சோதி,யென்னுமவர்தங்கடமைநடாத்திவந்தார்நடத்திவருமிதன்மே
னல்லூர், மன்னுகந்தசாமியாலயத்திலொரு மகோற்சவத்தில் வந்தக்
கோயிற் றுன்னுசிவாகமவிரோதப்படச்செய்திருப்பதனைச்சூழ்ந்தாரா
ய்ந்து. (எக)

மூலமூர்த்திகளாதி வேற்படையாயிருப்பதுநன்முறையன்றென
னச், சாலவணர்ந்தம்மட்டோசிவதீக்கையிலாரராதனைசெய்தற்குப்,
பாலரலரென்பதுந்தேர்ந் தக்கோயிலதிகாரிபாற்போதித்தார், சீலமி
லாவவனுமதற்குடன்பட்டானலனினியென்செய்வதந்தோ. (அ௦)

என்றங்ககன்றசைவத்தன்மையொன்றமறியாமலெண்ணிலார்
கள், சென்றந்தக்கிறித்துமதப்படுகுழியினுள்வீழுஞ்செய்திகண்டு, ந
ன்றன்றேயினிநடித்து சிவசமயநுண்பயெலா நம்மினோர்க்கோர்,
மன்றந்தமுறுமிடத்திற்றுபிதத்துப்புகல்வமெனமனத்தினோர்ந்து.(அக)

வண்ணார்பண்ணையிலிருக்கும்வைத்தியநாதன்கோயில்வந்தூட்செ
ன்று,கண்ணாரத்தரிசித்துவசந்தமண்டபத்திலங்கட்கண்டோரெல்லா,
மெண்ணாலேமதிப்பரியசபையொன்றுகூட்டியபின்பியங்குசைவத்,
துண்ணுமெய்ப்பொருளுமதனுண்மையும்போதித்தனர்யாருவவாதரே. ()

'இந்தவிதமொவ்வொருசுக்கிரவாரத்திரவினிலுமினிமையான,செ
ந்தமிழின்பிரசங்கந்தாஞ்செயல்போற்பிறர்தமையுஞ் செய்யச்செய்,
ர், கந்தசுவாமியினல்லூராலயத்தினைகுற்றமங்குக்காட்டினாராங், கொ
தவிதமுந்தெரிந்தோர்சரியென்றாசிலமூடரிகழ்ந்தாரன்றே. (அ௩)

வயசிருபத்தைந்தாமப்போதிந்தப்பிரசங்கம்வந்துகேட்டோ, ரய
விருந்துகேள்வியுற்றோரநேகருக்குப்பயன்பட்டதந்தோவிந்தச், செய
லினார்முன்னிருந்தனரேற்பொய்ம்மதமிதசேயதிற்சிறிதாயினு, மு
யலடையாதெனசெயலாமுயிர்கள்செயுங்கன்மதக்குலகின்மீதே.()

எண்டிக்குஞ்சைவமதமேபரம்புதற்கும்பரமதத்திலெலாம்பொயெ
ன்று, கண்டிக்குமதற்குயவேண்டுவனபிரசங்கஞ்செய்காலந்தன்னில்,
* விண்டிக்கும்புகழ்பெருகுமாறுமுகநாவலரைவியந்தாரேனு, மூண்
டிக்குப்போதனைசெய்பாதிரிமார்பார்சிவல்பாலோடிச்சென்று. (அ௫)

நாங்களிங்குவரும்போதுமதற்குமுன்னுமில்லாத நடக்கையெல்
லாக், தாங்களபிமானம்வைத்தபண்டிதர்போதித்தானஞ்சமயந்தா

* விண்டிக்கும்-ஆகாயமாகிய திசையும்.

ன்மே, லோங்கவெவ்வாறினியிவரைப்பண்டிதராநீர்வைத்தனுதவா தென்ன, வாங்கவனும்பண்டிதரைவரவழைத்துவினவுவானறியான் போல. (௮௬)

சிவன்கோயிறனில்வெள்ளிக்கிழமைசைவப்பிரசங்கஞ் செய்கின் றீரா, மெவன்கூறுமெனவுமதுகடமைகளிற்குறைவிதனுலெனுவெ ன்றின்னே, ரயன்கேட்கவுரைத்திடலும்பேசாமன்மௌனமாயமர்ந் துசென்றே, றவன்போம்பாதிரியீர்நீரிவர்போற்பண்டிதர்கிடையா துலகிலென்றான். (௮௭)

பின்னுமிவர்வழக்கம்போற்பிரசங்கங்கேட்பார்க்குப் பெரிதுஞா னம்,பன்னுவதாப்பலநூலின்சாரமாமறுமையிம்மைப்பயன்களெல்லா, மன்னுவதாச்செய்வதுகேட் டுயர்ந்தவித்துவான்கண்மறை வல்லமே லோ,ரென்னுமனந்தம்பேருமதிசயித்தார்பிரசங்கமேதேதென்னில்.

நித்தியமாஞ்சைவசமயமுமந்தச்சமயிகளந்நிலையினின்று, பத்தி செயுங்கடவுளுமப்பத்திசெய்வார்க்கங்கமொடுபயனுமிட்ட, சித்தி தருசிவாலயசேவையும்வேதாகமவியல்புஞ்சிவபிரானைப், புத்தியினி ன்மறவாததொண்டரியல்பாதியபுண்ணியமும்போலும். (௮௯)

இவ்வளவுமுக்கியமாம்விடயமெலாநியாயமொடுமெடுத்துக்காட் டு, மவ்வளவுகேட்டவர்க்குண்மாமிசபோசனஞ்செய்தோ ரதனைவிட் டா, ரெவ்வளனுமழிக்குமதுபானஞ்செய்தோரதனையிகந்தார்தீக்கை, செவ்வனுற்றுமறந்தவர்மீட்டும்பெற்றுச்சந்திமுறைசெய்யலானார்.()

உருத்திராக்கம்புனையாதிருந்தவரெல்லாம்புனைந்தா ருருத்திரன் பாற், கருத்திராப்பதகரெலாஞ்சிவாலயஞ்சென் றெதிர்வணங்கிக்கம லத்தாளுள், ளிருத்தினார்தோத்திரஞ்செய்யாரதுசெய்தார்பிறரையீர் த்திம்மார்க்கந், திருத்தினார்பூதியணியாரணிந்தார் விரததவஞ்செய் யார்செய்தார். (௯௧)

சைவமதநூலெல்லாம்பொய்யென்னும் பாதிரிமார்தம்மைப் பல் ால்,வைவரதன்பின்வேதசிவாகமங்கள்சிவஞானான்மாக்கட்காகச்,செ

ய்வரானென்றுதெளிந்துகொண்டாசித்தாந்தந் திகழ்பன்னூலு,மெ
ய்வரவோர்ந்தவரடியார்செய்தனவாசித்தார்விசுவாசித்தார். (கஉ)

மறையெனும்வேதாகமநூற்றெளிவெனத்தேவார திருவாசகங்க
ண், முறையறியாரஃதறிந்துகெட்டொருசசெய்தோதலுற்றார் மும்மூர்த்
திக்கு, மிறைவராஞ்சிவபெருமானொருவரேயவர்வழிபாடியற்றுவோ
ரே, கறையிலநெறிச்சித்தாந்தசைவரெனக்கணித்ததுவேகாதலித்தார்

சிவாலயவந்தனைமுறைமைதெரியாமறசெய்தகுற்றஞ்சேராதாக,
வவாமிகவேதெரிந்துசெய்தார்பெத்தநிலைதனினமருளறியாவண்ணந,
தவாதிருந்துமுத்திநிலைதனிற்றமமுண்மையடைசகுருதம்பிரான்பா, லு
வாமலியன்பாற்றுவசேதகுதியெனச்செய்தனர்தொழுகினரே.(கச)

ஒழுக்கமறியாரெலாமஃதறிந்தாரங்கடவுளுற்சவங்கொண், ட
ழுக்ககலவெழுந்தருள்வதானமைமாட்கட்காசவெனவாயந்தக்கால, முழு
க்கமனமபுறமபாகாதெதிர்கண்டுபணிந்துநளிமுதிருமனபு, பழுக்க
வருட்சீபாதந்தாங்கினர்பறபலாயாமபகாறபாறறே. (கரு)

ஆக்கலையன்பில்லாமலடித்தவர்தாமவைசிவலோகசதினின்றிம்,
மாக்களுலகினில்வந்தவெனறுமவையவயவதனைமல்குநதேவ, ஞக்க
மிகுமுனிவாவசிக்கின்றதுவுஞ்சிவபெருமானுவப்பினுடித்த, தேக்கந
ணிகவ்வியமைந்துதவுவனவாமெனவுந்தெளிந்துகொண்டு (கசா)

பூசையன்பினுற்புரிந்து புன்முதலியனவுதவிப்போற்றிவந்தார்,
காசைவீண்செலவாகக்கவறுசதுரங்கத்திற்கைவிட்டோாகண்,மாசை
விளைவிக்குமிவையெனவிகந்துசற்சனாசன்மாக்கந்தன்னி, லாசை
யுடனடந்தவர்சொன்னவ்வழியிற்செலவுசெய்தேயானந்தித்தார். ()

இவ்வாறுசனங்களெலாந்திருத்தமுறுவதுகண்டங்கியனுவல்லா,
ரெவ்வாறும்பரமதத்திற்புகாவண்ணஞ்சமயநூலெல்லாங்கற்கு, மவ்
வாறுதகுந்தகல்விச்சாலையொன்றுதாபிப்பதமையுமென்று, செவ்வா
றுபயில்வன்னார்பண்ணையிலங்ஙனஞ்செய்தார்சிறப்புற்றோங்க. ()

இவ்விதஞ்சைவசமயிகட்கெலாம்போதனைசெய்திடவுஞ்சைவச்,செவ்வியசீர்ப்பிரசங்கஞ்செய்திடவும்வாணாளைச் செலுத்துவோமென்,றெவ்வியலுங்கீதருமிவர்பார்சிவற்குததமிழ்போதித்திடல் கைவிட்டார், திவ்வியதஞ்சோதரர்க டடைசெயவுமதனையொருசிறிதுங்கொள்ளார். (௯௯)

பெருந்தொகையாம் வேதனமு மதியாமற் பாதிரிபாற்பெயரும்போதி, விருந்தவயசிருபத்தாறுமதன்மேற் றம்மொடுகூ[illegible]றிட்டுத்தம்மாற், றிருந்தமுணங்கிறித் துமதப்படுகுழியில்வீழ்ந்ததில்லைநாதற், கருந்தமிழ்நூலிலக்கணமுமிலக்கியமுங்கற்பித்தாரளவிலாமல். (௧௦௦)

எவருதவியேனுமின்றியித்தொடக்கந்தொட ங்குமிவ ரெவரானாலுஞ், சிவபெருமான்விதித்தவிதிதனக்குமாறுநடந்தாற்சினமேற்கொண்டுங்,கவரிவரைக்கண்டிப்பாராதலினாற்பொறாமைசினமதிகப்பட்டுத் தவறுறுபற்பலவிடையூறிவர்க்கியற்றினாரந்தோதயையிலாரே. (௧௦௧)

எவ்விடையூறெவர்செயினுஞ் சிவசமயம் வளர்விக்குமின்னோர் தம்பால், வெவ்விடையூரன்கருணைபதிதலால்விரோதமொன்றுமேவவில்லை, யவ்விடையவ்விரோதஞ்செய்தவரெலாம்பின்னர்நட்புற்றடுத்துச்சூழ்ந்தா,ரிவ்விடையநிறைவேற்றச்சிலசிலபுத்தகங்களிலாதிருத்தல்கண்டார். (௧௦௨)

தேடிவரவழைத்தனந்தஞ்செந்தமிழேட்டுப்பிரதிச் செய்யுளெல்லா, நாடியவைகளில்வழுக்களில்லனவாச்சோதித்துநவமாகத்தாங், கூடியவாறே சிலநூல்களைச்செய்துமவை பதிக்குங்குறிப்பினாலே, நீடியவச்சியந்திரமொன் றவசியம்வேண்டுமெனவுண் ணினைந்தாரன்றே. (௧௦௩)

வேறு.

இனையபோதகாசிரியர்மாணாக்கருளவர்க்கு
முனைவனுஞ்சதாசிவப்பெயர்கொண்டமூதறிஞன்
றனையுங்கூட்டுபுசென்னைமாநகர்தனைச்சாரு
மினைவினாற்பயணம்புறப்பட்டனர்நேர்ந்து. (௧௦௪)

வேதம்பூசித்துப்பூட்டியகதவினைவிமலன்
பாதம்போற்றியேயப்பர்தாந்திறந்திடப்பாடும்
போதஞ்சோதலமபுககனாவணங்கினர்போனார்
நாதன்றேவிமாமயிலுருககொண்டநகரில். (௧0௫)

அங்குநின்றுமபோயெங்குலகுருவரசாட்சி
தங்குசீர்த்திருவாவடுதுறையினைசசார்ந்து
பொங்குமாமறைப்பூசுரற்காயிரமபொனமுன்
னெங்குநல்லிசைமபெறததருமிறையைவந்தித்து. (௧0௬)

திருமடத்தைவந்தடைந்துபின்ஞானதேசிகர்கண்
மருமலர்ப்பதம்வணங்கினரிவாவருவதன்முன
பெருமையுறறுயாகலவியாறகேளவியாற்பெரிது
மருமைபெற்றிடும்வல்லரெனறஙகுளாரறிந்தார். (௧0௭)

ஓங்குபற்பலவிலக்கணவிலக்கியசதுள்ளார்
தேங்குசைவசித்தாநதசாநதிரததினுளசிலலோர்
பாங்குபெற்றவாட்சேபஙகளபணணினாபலவா
றுங்குசொற்றனாவிடைகளொவ்வொனறுக்குமமைய. (௧0௮)

சுருதியாதிமூன்றினுக்குமொததிருந்தமைதுணிந்தங்
கொருதினஞசைவப்பிரசஙகஙகேட்டிடவுளளங
கருதிநங்குருதேசிகரருளசெயக்கல்வி
தருதியாகருமங்ஙனஞ்செய்தனர்தகவே. (௧0௯)

தாமிதற்கெனத்துணிந்தவர்மறுப்பரோதகுதி
யாமிலக்கணம்பதிபசுபாசஙகட்கமைந்த
தேமிகுத்திடப்பிரசங்கஞ்செய்தனரெவரு
நாமிதற்குமுன்கண்டுகேட்டிலமெனநவின்றார். (௧௧0)

பத்தியில்லவர்தமக்குமெய்ப்பத்தியைப்பயிற்று
யித்திறத்தநற்பிரசங்கம்பத்தழுசெய்தி

யுத்திமுப்பதிற்றிரண்டொடுமேதங்களுமோரேழ்
வைத்திருப்பதெந்நன்மையுமுளதெனமதித்து. (௧௧௧)

உபயசந்நிதானமுந்திருவுளத்துளேயுவந்தச்
சபையுளோர்க்குமுன்பிரசங்கஞ்செயுமிவர்தமக்குச்
சுபமிகுந்தநாவலரெனும்பெயர்சொலத்தகுமென்
றபயநல்லருள்காட்டினரிதுபெறலரிதே. (௧௧௨)

ஆருமப்பெயராலழைத்திட்டனரதன்பின்
போருநாவலர்சென்னைமாநகர்தனைபுற்று
நேருறுஞ்சௌந்தரியலகரியொடுநிகண்டு
கூறுநல்லுரையச்சினிற்பதிப்பித்துக்கொண்டு. (௧௧௩)

சிலதினம்பின்னுமங்கிருந்தச்சியந்திரமொன்
றலகிலாவலியுடையதாமிருவிலைபளித்திவ்
வுலகின்மேம்படவாங்கியெங்கலையினுமுயர்ந்த
வலமைமேவியநாவலரதைவிட்டுவருங்கால். (௧௧௪)

அலைகொள்வாரிதிசூழ்புவிபுகழ்திருவண்ணா
மலையென்றோதுமாதீனத்திலருளொருவடிவாய்
நிலைபெறுஞ்சின்னப்பட்டமாயிருந்தசந்நிதானத்
திலையமின்றியேகாணநேரிட்டதங்கிதன்மேல். (௧௧௫)

திருந்துகல்வியின்றிறமையுஞ்சமயத்தின்றெளிவும்
பொருந்துமாறுகண்டுவந்துசம்மடத்தினிற்புகுந்தங்
கிருந்துசில்பகல்கழிந்தபின்போமெனவிசைப்ப
வருந்துதித்தமிழ்நாவலரதற்கிசையாரால். (௧௧௬)

வந்தவேதுவினுமெல்லனிற்றுமெடுத்திட்ட
வந்தநன்முயற்சிகளும்யாழ்ப்பாணத்திலநேகர்
முந்தவைபரமதத்தினிற்புகாமையுமுடிய
விந்தவெண்ணம்யார்க்கேனுமிங்கெய்துமோவிந்நாள். (௧௧௭)

இன்னம்பின்வருவேனெனத்தேசிகர்க்கிசைய
முன்னஞ்சொல்லிய நக்கன்றுநாவலரெனுமுநிஞர்
பின்னஞ்சார்தராயந்திரந்தனைக்கொண்டுபெரிது
மன்னஞ்சார்வயல்சூழும்யாழ்ப்பாணம்வந்தடைந்தார். (கக அ)

மனக்குமாமகிழ்வெய்திடக்கொடுவர்தகருவி
தனக்குவித்தியாநுபாலனயந்திரசாலை
யெனக்குறித்தொருபெயரிட்டுச்தாபித்தங்கியல்விற்
பணக்குழாம்புகழ்தருசிலபுத்தகம்பதிப்பார். (கக கூ)

அவசியஞ்சைவசமயிகட்காவனவனைத்து
நவமதாகவும்புராதனமுள்ளவுநல்லோ
ருவமையில்பிரயோசனமுள்ளவென்றேறுதக்
கவனமோடுதாம்பதிதடுதங்கும்பரப்பினூர்காண. (கஉ0)

இன்னநூல்களாற்சுவமதந்தலையெடுத்திடல்கண்
டுன்னருங்கொலைமறுத்தனன்றூலுரையுடனே
யென்னபற்பலநூல்களுந்திருத்தியசசிட்டா
ரன்னபோதவர்க்காயுளுமுப்பதானதுவால். (கஉக)

இறித்துமார்க்கத்திற்பற்பலவழுக்களாங்கேடு
குறித்துக்கண்டித்துயந்திரந்தனிலொருகும்மி
பொறித்துவிட்டனரம்மதத்தவரதுபொறுமன்
முறித்துவிட்டிடத்தொடங்கினர்பலவிதமுயற்சி. (கஉஉ)

அயர்ச்சியின்றியிவ்வியந்திரநிலைபெறற்கான
முயற்சியெம்பிரான்கருணையால்வளர்வதான்முறிக்குஞ்
செயற்சிஃறீயவர்நினைவொன்றும்பலித்திடாத்திறத்தான்
மயற்சியெய்துபுதாங்களுங்கடிதங்கள்வரைந்து. (கஉங)

நீதிச்சைவநாடணங்களேயெங்கெங்குநெருங்கிப்
போதித்தாரதுநாவலர்தாங்கண்டுபொறுமல்

லாதித்தோட்டிடவச்சிரதண்டப்பேர்வரைந்தோ
ராதிப்புத்தகம்விடுத்தனரடங்கினரவரும். (௧௨௪)

அந்தமட்டினில்லாதுவேற்படையமரங்கைக்
கந்தர்தாமொருகடவுளரல்லர்நேர்கருதி
லெந்தமொப்பவரிருமனையுடையவரென்றுந்
தந்தம்வாயினிலவந்தனசாற்றிவந்தனரால். (௧௨௫)

ஈதறிந்தநாவலரிவரடங்கவுமிவர்தூற்
போதனைக்குளேமயங்கியசிலர்க்குளபுந்தி
நோதகையநீங்கிடவுநன்னியாயங்களுலவ
வாதரந்தருபுத்தகமெழுதியொன்றமைப்பார். (௧௨௬)

அறுமுகப்பிரானசத்ததாதுக்களாலமைந்திங்
கிறும்படற்சுமையெடுத்தவரலர்தமதியற்கை
யுறுமருட்டிருமேனிகொண்டுற்றனருவந்து
பெறுமுறைக்கியைமனைவியரிருவரும்பேசில். (௧௨௭)

கிரியையிச்சையாஞ்சத்திகள்கரங்களிற்கிளரு
முரியவாயுதம்பதினொன்றும்பத்தினோடொன்றும்
பெரியருத்திரர்சூருரங்கிழித்தவேல்பிறங்கு
மரியஞானமாஞ்சத்தியேயாவருமறிமின். (௧௨௮)

என்றோர்புத்தகஞ்சுப்பிரபோதமாமெனப்பே
ரொன்றவைதெங்கும்விடுப்பவுமொளித்தனரன்றோ
ரன்றுமற்றவரனைவருந்தெளிந்திவையறியோ
மென்றுமிப்பொழுதறிந்தனமெனவியந்தேற்றார். (௧௨௯)

எற்றுச்சிற்சிலர்விசேடநாளினுஞ்சிலரென்று
நீற்றுத்தேசொளிமேனியராய்ச்சென்றுநின்று
போற்றிக்கந்தவேள்பூசைசெய்தனராதுபோழ்திற்
றேற்றுப்போயினபூதிரிமார்பலர்துவன்றி. (௧௩௦)

வெட்டவெட்டமேற்றழைந்திடுமரமெனமேலும்
பட்டணத்துளேதூடணஞ்செயத்தலைப்பட்டார்
கட்டமேயநுபவிப்பவர்தாஞ்சுகங்கருது
மிட்டமேதவர்க்கிதுதொழிலானதாலென்றும். (௧௩௧)

கண்டுநாவலர்சைவதூடணபரிகார
மண்டுமெனபிறலெழுதபுவிடுத்தனர்மகிழ்ச்சி
கொண்டுசெல்வியேயதுறைறவிலாசசெல்வமாககுறித்துத்
தொண்டுசெய்துவாழ்நாளினிறசிலாவந்துசொல்வார். (௧௩௨)

தாங்களில்லறம்புகுவதுவேண்டுமெத்தன்மை
நாங்கள்சொல்வதேதிருக்கின்றதெனப்பலநவிலத்
தீங்கண்மன்மதன்விகாரமுற்றவரிடஞ்செலுத்தும்
பூங்களம்புகாவிதமறுத்தார்பலபுகன்று. (௧௩௩)

சற்றுமில்லறம்புகுதற்குச்சம்மதந்தரேமப்
பற்றுவிட்டதாற்சிவாச்சனையன்பொடுபண்ண
லுற்றுங்காலங்கள்கழித்திடுவோமெனவுபாவு
பெற்றுவைகுந்தம்முடனைசதாசிவப்பெயர்ப்பெரியோன். (௧௩௪)

தனையுங்கூட்டிக்கொண்டகன்குறநாட்டினைச்சார்ந்து
நினைவெலாந்தமாசாரியரிடத்தினினிகழ்த்தி
மனையில்லைகினார்மற்றைநாட்காலையிலவந்தா
ரனையர்தூரதேசத்தவரவர்வரவுரைப்பாம். (௧௩௫)

படிகலிங்கங்களிரண்டுவிற்பதற்கதுபரமர்க்
கடியராகியநாவலரறிந்தவைகளையாய்ந்
தொடிவிலாவருட்குருமுனஞ்சோதிததொவ்வொன்று
முடியவோர்ந்தனர்பஞ்சசூத்திரவிதிமுறையால். (௧௩௬)

ஒன்றுமாத்திரங்குற்றமில்லாததாயுயரு
ஈன்றுபெற்றிடுமிலக்கணமுள்ளதாய்நான்கா

மென்றுசொல்வருணத்தவர்பூசிக்குமியல்பு
நன்றுமேன்மையுற்றிருந்ததியாதினுந்நாய்து. (௧௩௭)

சாதிப்பார்திறங்கண்டவாசாரியர்சுருங்கப்
போதிப்பாருயாநாவலர்நடையமைபூசை
திப்பார்புகழ்சீர்செயீரெனிலன்புங்கழ
வதிப்பாரதனிலுடையவர்பூசைசெய்நடுவோர். (௧௩௮)

என்னநைட்டிகப்பிரமசாரியவொழுகினிலே
மன்னலாயினாராதலாலசற்றுச்சம்மதித்தகா
ரன்னபூசையுமவாதமானுக்கராடுந்தகா
பின்னமில்கணிகலிங்கபூசையுஞ்செயப்பெற்றார். (௧௩௯)

பெற்றாங்கேசிலநாளிருந்திருவருட்பேணிப்
பற்றறுகேள்வியாற பூசையிலேமிகப்பழகி
பற்றங்கேடையாமலயாழ்ப்பாணமவந்தடைந்தார்
மற்றங்கேவருங்காலெல்லைஞங்கவரதுவயசே. (௧௪0)

வேறு.

இப்படிநிகழுநாளிவரிலேகற்றோ
ரெப்படியும்புகழில்லறதகினின
மெய்ப்படியேபிரவேசித்தாசிலா
செப்படியாரொடியாததிரைசென்றார்சிலர். (௧௪௧)

தந்தமிழ்வித்தியாசாலைபோங்கியே
யெந்தநாளுநன்கையெய்தாம்படி
முந்தவேநிருபங்கண்முடித்துவிட்டன
ரந்தகன்னிருபமேற்றவரநேகருள். (௧௪௨)

இலங்கையின்றலைநகரெனுங்கொழும்பினி
லிலங்கையமருஞ்சிரபெவர்க்குமீந்திடு

நலங்கையாரியற்பெயராநன்னிதசம்பியா
நலங்கையாரறுப்பினர்நாறசதச்செம்பொன. (௧௬௩

அததொகையேமுதலாகவைததுததம்
விததியாசாலையின்மிககபோதனை
யுய்ததனர்வநதுகேட்டோரெலாஙகிதி
ததத - யுற்றதுதநதுசென்றனா. (௧௬௪

திரவியமிங்ஙனஞ்சேரச்செய்தாற
பிரபுபால்வேதனமபெறறுப்பிள்ளைகட
குரமிகுமறிஞரூமுபாததியாயருட்
சரவிலாதனபுடனகறபிததாடரோ. (௧௬௫

தருமமாம்விததியாசாலையினைபொருட்
டொருபெருவர்ததகசாலையுததம
விருததியிநதுகொணடிரணடுசாலையும்
பெருமையேமல்குறதபெயரைப்பெறறவா (௧௬௬

திருநதுமாணுககராறசெட்டியாரிடத
திருநதிடவொப்புவிததெழுநதுசென்னைபோய
வருந்திறமெணணுபுமறைகள்வநதனை
பொருநதுமாரணியததுடபோறறிப்புகசனா (௧௬௭

இத்தலமாதியாந்தலங்களேததிச்சென
றுததமசசிறப்புப்பெரோணறுதாம்பெற
வைத்தசந்நிதானங்கள்வாழ்வுமலக்கடுஞ்
சுத்தமாமாவடுதுறையடைந்தனா. (௧௬௮

பொங்குமன்பெழவெழுப்போற்றிப்பூசைசெய்
தங்குநற்சந்நிதியாக்கினைப்படி

---

* தய்பெயர்பெற்றவர்-ஆறுமுகச்செட்டியார்.

துங்குசைவப்பிரசங்கந்தாந்திசை
யெங்குமேபரவச்செய்திருநதிட்டார்சிறேள். (௧௪௯)

பிரசங்கங்கேட்டதம்பிரான்களோதுவார்
வரசங்கஞ்சாததிரிமார்பிரபுக்கண்
முரசங்களேபோலவேமுழக்குசெந்தமி
ழரசங்கநாவலராகக்கருமைசெய்தனர். (௧௫௦)

பின்னரவ்விடம்விட்டுப்பெயர்ந்துபேர்பெறு
மன்னவர்பணிதருமபுரம்வந்தன
ரன்னவாதீனபண்டாரச்சந்நிதி
தன்னமாபூங்கழற்சரணம்போற்றியே. (௧௫௧)

ஆயசந்நிதானநல்லருள்பெற்றங்கணுந்
தூயநற்பிரசங்கந்துதிக்கச்செய்தன
ரேயநாளிலகழிந்திட்டபின்னெழீஇ
நாயஞாசம்பந்தநகர்நண்ணினார். (௧௫௨)

பேணியப்பரைச்சமண்பிரித்துக்கூட்டிய
தோணியப்பரையிருஞ்சுவைகொளபாற்குநேர்
காணியப்பரையரைசக்கனகமாமய
வேணியப்பரையருள்வேண்டிப்போயினர். (௧௫௩)

பதஞ்சலிவியாக்கிரபாதர்க்காகவே
நிதஞ்சலியாநடநிததாசெய்தல
மதஞ்சலிசெய்வமென்றணைந்துபோற்றிமே
லதஞ்சலியாதுமின்றெனவிருந்தனர். (௧௫௪)

நேசமாரத்தலநின்றுநீங்கியெத்
தேசமும்புகழ்சென்னைசேர்ந்துமாணிக்க
வாசகருடிருவாசகத்தொடு
தூசகல்கோவையார்சோதித்தாரப்பால். (௧௫௫)

சிலசிலபுத்தகந்தினமுஞ்சோதித்து
வலமிகுசதாசிவவள்ளல்பேரினாற்
பலமுறவச்சினிற்பதித்தியாவரு
மிலதெனுவிதம்வெளியேற்றினானன்றே. (கருசு

வேறு.

அந்நாளிற்...செல்வமளவிலாதொருங்கமைந்தோ
னெந்நாளுங்கவிவாணரியறறிறமைச்சேற்றபடி
பொன்னாலுமணியாலும்போதமகிழ்புரிந்திடுவோன்
றன்னுமமெவ்வுலகுந்தான்பரவவதரித்தோன். (கருஎ)

ஏதமிலாவள்ளலெனுமீகைபயின்றிடும்ராம
நாதபுரந்தனிலரசுநடாத்துதுரைராசனுக்குப்
போதனைசெய்மந்திரியாம்பொன்னுச்சாமிப்பெயரோ
னீதலூறமிவர்திறமையிவர்செய்நூலினிற்கண்டான். (கருஅ)

கண்டுநாவலரோடுங்கலந்துகருத்தானந்தங்
கொண்டுதிருவள்ளுவர்நற்கோவையாருரையுமறி
வண்டுதர்க்கசங்கிரகமன்னமட்டியமுமவை
பண்டுளதோமறப்பார்த்துப்பதிப்பிகரும்படியாக. (கருகூ)

மிக்கதிரவியங்கடருவேனென்றுவேண்டுதலு
மக்கணமேயதற்கிசைவுற்றவைகளைப்பார்த்தச்சிட்டுத்
தக்கவர்கடஞ்சமுகந்தமக்குத்தாமேவிடுத்தா
ரெக்கலையுமுணர்ந்தார்க்கிங்கிதுவியப்போவியம்புங்கால். (ககூ0)

அதன்சிறப்பெல்லாந்திருவாவடுதுறையிலருளுருவாய்
மதன்றிறத்தேகாகமசிவாயமூர்த்திகண்மடத்தி
னெதன்சிறப்புந்தெரிந்துணருமினியவித்துவானென்னுஞ்
சுதன்சிறப்பார்மீனாட்சிசுந்தரநாவலன்சொல்லும். (ககூக)

ழூன்றபாயிரத்துள்ளுமவர்மாணுக்கரிற்புத்தி
மான்றமிழ்நூலினிலெனநாவலர்பலருமதித்துவக்கு
ீதன்றதும்புமாலையணிதியாகராசச்செட்டி
நான்றனிசொல்பாயிரதநுந்தமிழ்விரகர்தாமுணர்வார். (௧௬௨)

இதுசிற்கநடராசரெழுந்தருளுஞ்சிதம்பரத்தின்
மதுசைவப்பிரகாசமுந்துவிததியாசாலை
பதுவைக்குமாசைமிகவதன்பயனுமதற்குதவி
நதுவிச்செய்வார்பயனுங்கண்டுநாவலர்கையால். (௧௬௩)

மிகவரைந்துபத்திரிகைவெளியிட்டார்மேன்மையெலாம்
புகலரியதிருமயிலைப்புரிதனிலேபோதமிகத்
திகழ்திருவண்ணாமலையாதீனத்தின்றிலகமென
வகலாமலிருந்தருளுமாறுமுகதேசிகரால். (௧௬௪)

அறிந்துசிலவோதுவாராலழைத்தங்கவர்வாயிற்
பிறிந்தறியாசமர்சைவப்பிரசங்கம்பிறர்பொய்ம்மத
முறிந்திடக்கேட்டிவரறிவின்முதிருரெனமொழிந்தவர்க்குச்
செறிந்ததமதுருத்திராக்ஷஞ்சியமெடுத்துத்திருக்கரத்தால். (௧௬௫)

சாத்திநாவலரையுபசரித்தனுப்பத்தாமவரை
யேத்தியுயாபலதலமுமிறைஞ்சுபுநல்வெழிற்றில்லை
தோத்திரஞ்செய்தருணடஞ்செய்சுவாமியையுங்கைதொழுதுள்
ளாத்திரமோடேதுறைசையடைந்துகுருவடிபணிந்தார். (௧௬௬)

சற்குருவம்பலவாணசாமியாலச்சாமி
பிற்குருசுப்பிரமணியபெம்மானுற்பெரிதுந்தந்
நற்குணநற்செய்கைகளாநன்குமகிழ்நலம்பெற்றார்
கற்குமவரேபெரியர்காசினியிற்கனம்பெறற்கே. (௧௬௭)

தமைவியந்துகனஞ்செய்யுஞ்சற்குருதேசிகர்தம்மேசை
டிமையளவும்பிரியாமலிலக்கணநூலிலக்கியநூ

லமைசைவசித்தாந்தவாகமநூலத்தனையுங்
கமையறிவாலாராய்ந்துகாலங்கள்சிலகழித்தார். (௧௬௮)

தேசாருமிவர்கல்வித்திறத்தாற்றேசிகர்மடத்தி
லேசர்வகாலமுநீரிருந்தியங்குஞ்சைவவித்தி
யாசாலைதாபிக்கவமையுமெனவுதவுகொன்றும்
பேசாரெங்குஞ்சைவப்பிரகாசம்பெறும்பொருட்டே. (௧௬௯)

அதைமறுத்துச்சின்னாட்சென்றங்கதன்றம்மார்க்கத்திற்
றதையுமருட்சிவபிரானாலயங்கள்பலசார்ந்துசிவ
கதைபயிலுந்திருநாகைக்காரோணத்தைத்தொழுது
சிதைவிலவ்வூரார்வேண்டத்தமிழ்ப்பிரசங்கஞ்செய்தார். (௧௭௦)

மலிதமிழின்பிரசங்கமழைகண்டமாந்தரெலாஞ்
சலியாமலினிச்சைவநிலையெய்துமெனவியந்தா
நலியாவந்நகரகன்றுநாவலருநாயபுகழு
மொலிகடல்சூழ்யாழ்ப்பாணமுற்றாரவ்வூர்பகிழ. (௧௭௧)

உற்றநாள்வயசுமுப்பதொன்பதாகியதுயாவு
பெற்றசிதம்பரங்கல்விப்பெருஞ்சாலைபெறும்பொருட்டுக்
கற்றவராறபெருந்தனஞ்சேகரஞ்செயவுளங்கருதி
மற்றவர்தாமுன்னமேவண்ணைப்பணையில்வைத்த. (௧௭௨)

தமதுவித்தியாசாலைதன்னிலொருசபைகூட்டி
யமர்தருகல்விச்சாலையாற்றலாலாயபயன்
சமனிலையிற்பிரசங்கத்தாலெடுத்துச்சாற்றுதலு
மெமர்புகழவிருநிதியமீந்தனர்கேட்டோரெல்லாம். (௧௭௩)

சுகமேமல்கியபருத்தித்துறைவளருஞ்சித்திவிநா
யகர்கோயிலினிலிதுபோலவொருநாட்பிரசங்க
மிகவேசெய்தார்கேட்டோர்மிக்கநிதியந்தளித்தார்
தகைமையொன்றுமேற்படுத்திவழுவாதுகொடுத்துவந்தார். (௧௭௪)

உயர்சமயதீக்கையுமில்லோரைக்கண்டஃதுற்றோர்
மயர்வகலுமவண்பூதிவாங்குதலும்வணங்குதலு
மயர்வில்சிராத்தங்களினிலழைப்பதுஞ்சிவார்ச்சனைகள்
செயநியமிப்பதுமந்தோசிவாகமவிரோதமென்று. (௧௭௫)

ஒவ்வொர்பிரசங்கத்துமுறுதியுடன்போதிக்க
வெவ்வெவருமதுசெய்யாதிருந்தனர்வைதிகராய
வவ்வெவரும்பிராமணர்நாமாமென்றுள்ளகங்கரித்துத்
தெவ்வெறிவேல்போலிவரைச்சினங்கொண்டுநிந்தித்தார். (௧௭௬)

அந்தமட்டோசிவாகமநிந்தையுஞ்செய்தாரந்தோநித்
தந்தமைநிந்தித்தாலுந்தாம்பொறுப்பர்தம்பெருமா
னந்தமுறுமடியவரையாகமத்தையிகழ்ந்தனரே
லெந்தவிதமும்பொறாரென்செய்தாரிவரென்னில். (௧௭௭)

மறையெலாம்பொதுவாகமங்களெலாஞ்சிறப்பாக
விறைவகுத்தான்வைதிகர்தாமெய்துவர்புண்ணியலோக
மறைசைவமார்க்கத்தோரடைவர்முத்தியிரண்டையுமென்
றுறைபிரமாணங்காட்டியொருபிரசங்கஞ்செய்தார். (௧௭௮)

வந்திதுகேட்டிடுமந்தவைதிகப்பிராமணர்கள்
சிந்திதமன்றோதசித்தியும்விளைக்குஞ்சிவாகமத்தோர்
தந்திருத்தாள்வணங்கிடவுந்தாம்பரார்த்தம்பூசை
புந்தியுறச்செயவும்விதிபோதவுண்டாமெனப்புகன்று. (௧௭௯)

பற்பலகாற்சபைகூட்டிப்பயில்வீண்வாய்ப்பறையறைந்தார்
சொற்படிகாட்டாமையினாற்றன்றியபல்சனத்தொகுதி
யற்புதநாவலர்சொல்லுமதுவேநூற்சம்மதமாங்
கற்பனையன்றெனத்தெளிந்துகைக்கொண்டார்கண்டவரே, (௧௮௦)

சிலசிலவைதிகமறையோர்சிவதீக்கைசெயப்பெற்றார்
சிலசிலவைதிகமறையோர்சிவபூசைசெயப்பெற்றார்

சிலசிலவை திகமறையோர்சிவாகமத்தேர்ச்சியையடைந்தார்
சிலசிலவை திகமறையோர் திருமுறையெல்லாந்தெளிந்தார். (௧அ௧)

வைதிகமார்க்கத்தினிலெண் மடங்குசைவமார்க்கமே
யுய்திபெறத்தழைத்தெங்குமோங்கியதாலுறுமிதற்கென்
றெய்தியநாவலர்சாதநியென்னென்பேமெம்பிரான்
செய்திருநல்லருள்போலுஞ்செப்பலாந்தகைத்தன்றே. (௧அ௨)

வேறு.

ஆன்றநாவலர்க்காயுளைநாற்பஃதானபின்
சான்றவித்தியாசாலையும்வாதத்தசாலைய
மேன்றதம்மிடங்கற்றமாணாக்கனெனச்சொலுந்
தோன்றலாந்திலலைநாதனைப்பார்க்கச்சொலிவிட்டு (௧அ௩)

சென்னபட்டணஞ்சென்றுதிரும்பநற்சிந்தைசெய்
தென்னமேன்மையுமெய்துதிருவிராமேச்சுர
முன்னஞ்சென்றுவணங்குபுசேதுவின்மூழ்கிப்பின்
மன்னர்போற்றுமதுரைவணங்கமதித்தனா. (௧அ௪)

இராமநாதபரத்துக்குப்போயங்கிருக்கின்ற
தராதலம்புகழுந்துறைசைமடந்தனனிலவாழ்
பராயசீர்கொளவிசுவலிங்கப்பெயாப்பண்ணவன்
விராவுமன்பினில்வேண்டவிருந்தனர்மேவியே. (௧அ௫)

அந்நகர்க்கிறையாகியிந்நாளரசாட்சிசெய்
மன்னர்கோமகன்சீர்த்தியையார்சொலவல்லவர்
பன்னருங்கலைபற்பலவாய்ந்தப்படிநிற்கும்
நன்னர்வாய்மையிரக்கங்கொடைநன்னடையுளான். (௧அ௬)

நீறுகண்டிகையேபொருளென்றுநினைந்தணிந்
தாறுமன்பினிலோசைபெறவைந்தமுச்சரித்
தேறுசீர்ச்சிவபூசைபுரியுமியல்பினுற்
கூறுமுத்தியடையவராவியகொள்கையான். (௧அ௭)

சேதுநாணஞ்செய்தோர்தனைவந்துதெரிசித்தா
லோதுபேறுண்டெனுமொருவார்த்தையுலகெலாம்
போதுமாறுபுகழையடைந்தபுரவல
னேதுபுண்ணியஞ்செய்தனனோவிதற்கெண்ணியே. (௧அஅ)

பொங்குசைவமதமுமஃதுபொலிவுறத்
தங்குசைவசித்தாந்தமுஞ்சங்கத்தமிழுமே
யெங்குமாகமனிதவடிவமெடுத்தநல
குங்குவாழ்பல்லுயிர்க்குமோர்தாயெனவுற்றுளான். (௧அ௯)

மாரவேளுமருண்டுமடந்தையராகியே
யாரமாரவணியும்புயாசலத்தன்புடன்
சேரவெண்ணும்பெருவனப்பெய்துஞ்சிறப்பிற்பூ
பாரமெண்கிரியெண்கரிநீங்கப்பரித்துளான். (௧௯௦)

அளந்துகல்வியளவுபொருண்மரியாதையோ
டுளங்களிக்கும்போலியர்ககியுமுதுகண்டோ
ரிளம்பிராயத்திலேகற்றிலஞ்செய்வதென்னென்றுட்
டளர்ந்துசோர்தரவென்றுமிச்செய்கைதவறுருன். (௧௯௧)

கற்றமேலோர்கழகம்பலநகரங்களி
னற்றமிழ்விளங்கும்படிவைக்குநலந்தர
லுற்றபாற்கரசேதுபதியெனுமொண்பெயர்
பெற்றவன்றிசைகாணுஞ்செங்கோல்கொண்டபெற்றியான். ()

பெருக்குஞ்சீரிவ்விறைக்குப்பெரியபிதாவெனுந்
தருக்குநேர்பொன்னுச்சாமிநரேந்திரன்றன்னைக்கல்
டுருக்குமன்பிலராயினர்முன்சென்னையுற்றிரு
வருக்குமெய்துமொருமனத்தாபமுதித்ததோ. (௧௯௩)

அந்நராதிபனுவலர்வந்ததறிந்தன
னென்னராயினுநஞ்சமத்தானத்திலெய்தினம்

முன்னர்வந்திலராயினரில்லைமுதினாரா
மின்னர்வந்திலரென்வியப்பென்றுளத்தெண்ணியே. (௧௯௪)

வெருவுமாறிறனிடத்துள்ளநல்வித்துவா
னொருவன்பாலிதுணர்த்தலுமபோயறிந்துங்குநான்
வருகிறேனென்றவன்சொலிநாவலர்வைகிடத்
தருகில்வந்திருந்தன்புசெலுத்தியளவளாய். (௧௯௫)

இன்னுமிந்நகர்மன்னனைக்கண்டிடவில்லையோ
வென்னும்போதிலதற்கிட்டமில்லையெயகசென்றார்
பின்னுமிந்நகர்வந்திருக்கின்றவோர்பெற்றியான்
மின்னுநீர்கண்டுபோதன்முறையென்றுமீண்டனன். (௧௯௬)

அரசன்பாற்சென்றவையனைத்துஞ்சொல்லினானவன்
பரசுநாவலரிவசெய்திநம்மையும்பாராதிடா
துரமொடேகினமக்கவமானமுறுமொரு
தரமினஞ்சென்றவர்வரச்செய்விர்தமிழ்வலீர (௧௯௭)

என்றனுப்பலுமேகிப்பிரசங்கத்தின்னருட்
குன்றமொப்பவர்தம்மைக்கலந்துபின்கூறுவா
னொன்றயாரிங்குறினுமெவர்க்குமுதவுமெம்
மன்றனைக்கண்டுபோதலெந்நாளும்வழக்கமே. (௧௯௮)

ஆனதாலவற்காணநுமக்கன்படாமலே
போனதற்புதமாமஃதன்றிப்பொருவிலா
ஞானநாவலராகுமுமக்குநலமன்றே
தானறிந்ததுசாற்றினனென்றலுந்தாஞ்சொல்வார். (௧௯௯)

ஒருவர்க்காணவிருப்பமில்லார்தமையுற்றுநீர்
மருவிக்காணும்படிசொல்வதுகன்மதியுமன்
றருமைத்தாமன்பிலாதவொன்றைச்செய்வதுமெமக்
கிருமைக்கும்பயனென்றுமின்றென்னனுமேகினான். (௨00)

ஏகிவேந்தனைக்கண்டிந்நிகழ்ந்தவெலாஞ்சொன்னான்
னூகியாகியநாவலர்பாலின்னுமோர்தரம்
போகிப்பார்த்திங்குவம்மெனக்கூறினன்புந்திமே
லாகியோர்தமைக்காணவெவர்க்கன்படாததே. (௨௦௧)

வேந்தனாணைமறுப்பதற்கஞ்சியிவ்வித்துவான்
போந்தனன்மறுநாளினினாவலர்போந்தவற்
காந்தன்மையொன்றுங்கூறிலராஃதறிந்தப்புறஞ்
சார்ந்தமன்னன்வலிமையுமேன்மையுஞ்சாற்றினான். (௨௦௨)

அவையனைத்தையுங்கேட்டருணாவலராகியோ
ரிவைகட்கஞ்சிவரவிசையேனென்றிறைவன்செய்
னவையனைத்தையுஞ்சொல்லிக்கண்டித்தனர்நாவல
ரெவைசொன்னாலும்வராரெனவேந்தற்கிவன்சொல்வான். (௨௦௩)

இத்தகைத்திறமிங்கெய்தியாருமிசைத்திலர்
சித்தமார்தருநின்னதிகாரஞ்செலுத்தென்றா
னுத்தமத்திறமன்றதுசெய்வதுயாச்சியே
யெத்தகைத்திறத்தும்பெற்றவரவர்க்கின்னினி. (௨௦௪)

பகையெதேனுஞ்செய்தானமக்கேசம்பவித்திடுந்
தொலையில்கேடிங்ஙனெய்தும்பிறவிதத்துவானகனோர்
தலைகயினாலர்நாமேவலிந்துதழுவியெவ்
வகையிலாவதழைப்பதுவேநன்மதியென்று. (௨௦௫)

ஒருபாயங்கருதிவயிணவமோதுபு
தேருஞ்சாத்திரிமார்களைக்கொண்டுதெளிவினிற்
சாருஞ்சைவசமயப்பிரசங்கஞ்சாற்றினா
லாருங்காணவதனைமறுப்பமதன்றியும். (௨௦௬)

துறையில்லவைணவமார்க்கமுயர்வென்றுதாபிப்போ
மிறையவைக்களத்தென்றோர்கடிதமெழுதுவித்

துறையுநாவலருக்கனுப்பித்தனனுற்றதன்
முறையுணர்ந்துமிகப்பரிகாசமொழிந்தரோ. (உ௦எ)

அக்கரப்பிழையின்றியெழுதவுமாய்ந்திலா
மக்களோநஞ்சமயத்தைவாதஞ்செய்வாரென்று
மிக்கவாசகமபேசிததிருப்பிவிடுத்தனர்
தக்கவாறுசெயநினைந்தான்பொன்னுச்சாமிவேள். (உ௦அ)

கன்றுதாயைப்பிரியினுந்தாய்ப்பசுக்கன்றினைத்
துன்றுமன்பொடுபாலுவந்தூட்டுஞ்சுரந்துநா
மொன்றுகுற்றமறியாதியற்றியுளதெனி
லின்றுதாமும்பொறுத்திங்கெழுவதியற்கையே. (உ௦௯)

என்னுமிப்பொருள்கொண்டகவியொன்றியற்றுபு
பின்னுந்தமவித்துவானிடமீந்தனுப்பிததனன்
மன்னுநாவலாவாங்கியப்பாடலைவாசித்தே
யின்னுமன்பிறொருவாவலிந்தழைததிட்டுநாம். (உ௧௦)

போகலாமைசிறப்பன்றெனவெண்ணிப்போவதற்
காகவேயோரமைதிசெய்தாரதரணமனைக்
கேகலாமவர்செயகட்டுப்பாடொன்றுமின்றென
யோகநாவலரிட்டப்படியங்கணுற்றனர். (உ௧௧)

ஆயபோதிலருந்தமிழ்நாவலரையெதிர்
போயழைத்துப்புரவலனுட்கொடுபோந்தபின்
னேயவோராசனததிலிருததியியல்பல
மேயகல்விப்பிரசங்கஞ்செய்திடவேண்டினன். (உ௧௨)

ஆயுநாவலரன்னவன்வேண்டுதற்காகநற்
றூயுமானவாசொல்லியசைவசமயமே
யேயுமெய்ச்சமயம்மெனும்பாடலெடுத்திசைத்
தோயுமாறில்பிறப்பிறப்பில்கடவுள்சிவன். (உ௧௩)

ஒருவரேயவர்தம்மைவழிபடுவோரெலா
மருவுசைவசமயமேமெய்ச்சமயமென்று
கருகும்விண்டுமதததைநியாயம்பல்காட்டுபு
பெருகுசாத்திரிகண்முனங்கண்டித்துப்பேசினார். (௨௧௪)

ஓதுமப்பிரசங்கமகிழ்ந்தங்குயரிரு
சாதுராவையழைததுத்தமிழ்ப்பிரசாரகீ
ரேதுமன்பிற்கொடுப்பதுகொள்வதியல்பெனுஞ்
போதுமன்னவனன்பினமுதிர்ச்சிபுறங்கணடு. (௨௧௫)

வேறு.

ஆசுவென்றனராதலாலவன்றனருங் கொடைக்கையினாலெடுத்த வர்தம், வாணிந்தனாகியேட்டினிலே வரையும்வல்லநூல் பலபல வாய்ந்த, நேகமாம்பயனுலகினுக்கெய்த நீவிரச்சிடவேண்டுமிந்நியதி க், கோகையாணிதியுதவுவலென்று ரேமென்றேற்றுத்தம் முறையு ளுற்றனரால். (௨௧௬)

மற்றநாட்டிருவுத்தரகோச மங்கையுற்று மாமகேசனை வணங் கி, நற்றவம்பயின்முனிவரன்மடத்தை நாடிப்பின்னருநணியதைவிட் டுப், பெற்றமூர்பவராறுபததுநான்கு பிறங்குமாடல்கள்செயப்பெறும் பதியை, யுறறமர்ந்தனராயுளுநாற்பத் தொன்றுசென்றதாலுயருநா வலர்க்கு. (௨௧௭)

சங்கவாணர்வாழத்தலத்தரசன் றனக்குவெப்பநோய்தவிர்த்தருள் புரியுந், துங்கமாமறையோர்மடந்தன்னிற் றுலங்குதேசிகசுவாமிக ளோடு, மங்கண்வாழ்சைவப்பிரபுக்கள்வேண்டு மதற்கிசைந்துசின் னாளினிதமர்ந்து, தங்கணாயகர்கோயிற்குநிதம்போய்த் தரிசனஞ்செ ய்து தாம்வரலானார். (௨௧௮)

அரசுசெய்தரு ளங்கயற்கண்ணி யம்மைசந்நிதானத்திலத்தலத் தின்,* பெருமையிந்திரனரும்பழியகற்றும் பிஞ்ஞகன்றிருவருட்பெ ரும்பெருமை, பரவுசைவசித்தாந்தத்தின்பெருமை பலவுமோர்தினம்

பயில்பிரசங்க, முறைசெய்தாரிவைகண்டுகேட்டறியா துள்ளவென்றி யாருங்களிப்புறவே. (உ௧௯)

கோயிலர்ச்சகரம்மைக்குச்சாத்திக் கொண்டுவெந்தபூதியைக்கை யிற்கொடுத்து, வாயின்வல்லநாவலவர்தந்தலையின் மன்னுசீர்ப்பரிவ ட்டமுஞ்சூட்டித், தாயின்மிக்கபேரன்பினுன்மாலை தரிக்கப்பெற்று மேதகுசிறப்புடனே, யாயிலின்னதென்றளப்பிலாப்பெருமை யமை மடாலய ததனில் வந்தமர்ந்தார். (உ௨௰)

மீட்டுமெங்கொருநாட்பிரசங்க மிகச்செய்தாரதுவிரும்புபற்பல ருங், கேட்டுச்சைவசமயமுமச்சமயங் கெழீஇயதம்பிரான்முனுங்கே டின்றி, நாட்டுமேன்மையுற்றவையெனவுணர்ந்தார் ஞானதேசிகராய ருணல்கு, மீட்டுபல்புகழ்மகாசந்நிதான மியங்குதஞ்செவியிட்டவே டத்தை. (உ௨௧)

திருக்கரங்களாலெடுத்திவர்செவியிற் சேர்த்தல்கண்ட சின்னச் சந்நிதான, முருககமோடுதம்மாறுகட்டிகளை யுடனெடுத்தணிந்துவ கையுட்கொண்டு, தருக்கஞாயமாதிலக்கணக்கொத்திற் றங்குமையய கடவிர்ந்தனர்கேட்டங், கிருக்குநாளினிற்பூவணம்போய்வந் தேடக முதலியதலமெய்தி. (உ௨௨)

வணங்கிவந்தபின்றெய்வயானையைமுன் மணஞ்செயெம்பிரான் வாழுமாமலைசென், றிணங்கியனபுடன்றொழுதுசின்னாளங் கிருந்து பின்னருமதுரையிலேகி, யுணங்கிவந்தவர்க்கருளசெயுங்குருவா முப யசந்நிதியுத்தரவுயர்நற், குணங்கிளர்தரவளர்க்கு நாவலர்கைக்கொடு திருப்புத்தூர்சென்றுகைகுவித்து. (உ௨௩)

வேறு.

தெண்டிரையுலகம்போற்றுந் திருவண்ணாமலைபாதினங்
கொண்டிருந்திடுகேற்குன்றக்குடியினைக்குறித்துவந்தங்
கண்டியமடாலயத்திலருட்குருவடியைச்சார்ந்து
தொண்டியல்புற்றோர்சின்னட்டேயதேசிகர்சொற்கோளால், (உ௨௪)

தீங்குநாளருட்பண்டாரச்சந்நிதிதாஞ்சித்தாந்தத்
தெங்குமாட்சேபஞ்செய்யவிவருங்கேட்டவைகட்கெல்லா
மங்குநற்சமாதானஞ்சொற்றநேகநாளகற்றியோர்நாட்
பொங்குசாத்திரிகண்மிக்கபுராணிகர்முதலோர்முன்னம். (உஉரு)

தடையறுசைவசித்தாந்தத்துயர்வையுஞ்சார்ந்தோர்க
ளடையுறுபயனையுந்தம்மாலளந்தறிந்தமட்டுங்
கடன்மடைதிறந்ததென்னக்கண்டவர்வியக்குமாறுங்
கடைவொடுபிரசங்கித்தாரவரையொப்பாவாருண்டோ. (உஉசு)

தமைநிகர்பிறவாதீனந்தங்குதேசிகர்தாமேனு
மமைதருபல்லக்கேறியகநெறியணுகவொட்டா
வுமையொருபாகநீத்திங்குற்றசந்நிதானமோங்குங்
கமைபெறுமிவர்தேர்மிக்ககல்விவன்மையினைக்கண்டு. (உஉஎ)

திருமலிசிவிகையேற்றிச்சிறந்தசாத்திரிகளாதி
மருவுதம்பிரான்களோதுவார்கள்பற்பலவயங்கும்
விருதுகண்முன்புசெல்லவியனகர்வலஞ்செய்வித்தார்
பொருவில்பன்னளிருந்தப்புறம்விடைபெற்றுப்போனர். (உஉஅ)

சிறந்தமண்கூடையீசன்றிருமுடியேறச்செய்தார்
பிறந்தமாநகருட்போயெம்பிரான்கழல்பெரிதுந்தாழ்ந்தங்
கறந்தவாதுறைகோமுத்தியாதீனமடத்திலன்பின்
றிறந்தவருதுசின்னள்செலவிருந்தனரிச்செய்தி. (உஉகூ)

தமிழ்மறையெனுந்தேவாரந்தனைப்பலதரஞ்சோதித்துள்
ளமிழ்தெனயாருங்கொள்ளவச்சடித்துதவுமன்ப
னிமிழ்திரையுலகெலாந்தேரிராமசாமிப்பேரேந்தல்
சிமிழ்மூலமடவாராசைசிறிதுந்தேரான்றெரிந்து. (உகூ0)

சென்றுநாவலர்பாற்கேட்டுத்திருவிளையாடற்னிற்
றன்றுசந்தேகந்தீர்த்தான்றுகளில்வன்றெண்டச்செட்டி

யொன்றுநன் ஞூல்விருத்தியுரையிற்சந்தேகமொன்று
மென்றுமின்றெனக்கேட்டாணிதற்பினிந்நகர்விட்டேகி. (௨௩௧)

தொண்டைமான்புதுக்கோட்டைக்குத்துதியுடன்சூழவந்தா
ரண்டையிஞட்டுக்கோட்டையரியவர்த்தகரனந்தர்
பண்டைநூல்வல்லார்வந்தபான்மைபற்பலகாற்கேட்டுக்
கொண்டகமகிழ்ந்துவந்துகுழீஇநெடுங்குடியிற்செய்யும். (௨௩௨)

புரிசெய்கும்பாபிடேகப்பொருட்டழைத்திடலும்போவா
*ரரிமளவாலயத்திலங்குளார்யாரும்வேண்டத்
திரிபுராந்தகர்தஞ்சீருஞ்சிவனடியார்தஞ்சீரும்
பெரியதோர்சிவசின்னத்தின்பெருமையுமெடுத்துப்பேசி. (௨௩௩)

அச்சிவசின்னந்தாங்குமவர்கண்மாமிசமருந்த
லிச்சியாதிருக்கவேண்டுமெனப்பிரசங்கிததிட்டார்
மெய்ச்சியங்கிதுகேட்டோர்மாமிசமுணல்வெறுத்துவிட்டா
ருச்சிமேற்கொளுமின்னேருமுயர்நெடுங்குடியூருற்று. (௨௩௪)

சிவபிரான்சேவையோடுசிவப்பிரசங்கமுஞ்செய்
தெவரும்வந்துபசரிக்கவேற்றந்தநகர்விட்டேகி
யுவமையில்லாவானைக்காவுயர்சிராப்பள்ளியோடு
தவமலிதஞ்சையாதிதலங்களைச்சார்ந்துபோற்றி. (௨௩௫)

மாமகவிசேடங்கொண்டுவைகியதலத்தில்வந்து
தாமகலாதிருந்தார்தஞ்செய்திதனைக்கோமுதலிக்
கோமகராசயோகங்கொண்டசற்குருவென்றோத
லாமகாசந்நிதானமறிந்துதம்மடாலயத்தில். (௨௩௬)

வித்துவாஞயிருந்துவிரும்புதேவாரமேய
வுத்தமவிசேடமுற்றவுயர்பலதலங்கட்கோங்கும்

---

* அரிமளம் ஓர் தலம்.

புத்தமுதனையபாடற்புராணஞ்செய்போதமாருஞ்
சுத்தநற்குணமீனாட்சிசுந்தரத்தோன்றலோடு. (உ௩௭)

ஓதுவார்சிலரையுஞ்சேர்த்தொருங்குடன்சென்றுநீரிப்
போதுநாவலரைநம்பாற்புகுவியும்போமென்றோதச்
சாதுவாமவருஞ்சென்றுசைவபோதகரைக்கூட்டித்
தீதுதீர்மடத்தில்வந்தார்தேசிகர்தமைச்சேவித்து. (உ௩௮)

போதகரிருக்குநாளிற்புறமதப்புரட்டுப்போக
வேதவாகமசித்தாந்தவிரோதமிலவிதமதாக
வேய்தமிழ்ப்பிரசங்கத்தாலிலக்கணவிலக்கியத்தின்
வாதஞ்செய்வார்கட்கையமறைத்தலான்மகிழ்தலினார். (உ௩௯)

இத்தலமகன்றுபின்னரியங்குபுள்ளிருக்குவேளூ
ரத்தனைவணங்கியென்பாலரிவைசெய்தவர்பிறந்த
சித்திசேர்தலம்வணங்கிச்சிதம்பரஞ்சென்றுபோற்றி
நித்தநன்னடனஞ்செய்வார்நிறைபெருங்கருணைநீரால். (உ௪௦)

வித்தியாசாலையொன்றுமேலைவீதியிற்கட்டி
வைத்துநன்முகூர்த்தந்தன்னில்வந்தமாணாக்கரெல்லாஞ்
பெற்றிடக்கற்பிக்கச்செய்தனர்சிறார்களெல்லாம்
புத்தியான்முன்னஞ்செய்தபுண்ணியம்போலுமன்றே. (உ௪௧)

கருவிநூல்பலவற்றோடுகெண்டவர்களிக்குமாறு
பொருவிலாச்சமயநூலும்போதிக்கும்பொற்பினாலே
மருவியகல்விச்சாலைவைத்தவர்தமைமதித்தே
யிருமையும்பெறலாமிங்கேயியல்கற்றோரெனவிதந்தார். (உ௪௨)

எங்குல்குருவாதீனமென்னுங்கோமுத்தியாதி
தங்குபற்பலவாதீனசந்நிதானங்கள்சைவம்
பொங்குநல்லொழுக்கமிக்கபுகழ்ப்பிரபுக்கண்மற்றோ
ரிங்குநன்னடேசர்பாதமிறைஞ்சிடவரும்போதெல்லாம், (உ௪௩)

அன்புடன்கல்விச்சாலையடைந்துபிள்ளைகளையங்கே
முன்புறநிறுத்தித்தக்கமுறைமுறைபரிசோதித்துப்
பின்புநாவலர்தாம்பெற்றபேறேபேறென்றுபேசி
யின்புறுபுத்தகங்களியல்பரிசெனவேயீவார். (உ௪௪)

நாவலர்தரிசனத்தானாகைக்காரோணநாடிப்
போவதுபுரிந்தாரங்கேபோந்தமைதெரிந்துபூவாழ
மாவதிநாட்டுக்கோட்டைவர்த்தகர்சிலர்கள்வந்து
மேவரப்பேசித்தில்லைவித்தியாசாலைமேன்மேல். (உ௪௫)

நடைபெறவேண்டுமென்றுநன்னிதிநல்கவாங்கிக்
கொடையுளங்கொடுருவேட்டகுடியுற்றுக்கும்பிட்டேத்தி
யடைதிருக்கடவூரேகியங்கணாருள்பெற்றன்பே
யிடையறாத்தில்லைமூதூரெய்தினரிருந்தாரிந்நாள். (உ௪௬)

தில்லைவாழ்கோயிற்பூசைசெய்குநர்சிலர்திரண்டங்
கெல்லையில்சிவாகமங்களியம்புதீக்கையினாலேது
மில்லைமெய்ப்பயனீதாலேயிதுபெறாதிருக்கின்றேமென்
றொல்லைநிந்தித்தாரொன்றுமுணர்ந்திலார்க்குணர்வுண்டாமோ. ()

இன்னுமவ்வாலயத்திலியற்றுறுங்கிரியையெல்லாந்
துன்னும்வைதிகமாமென்றேசொற்றனரச்சொற்கேட்டோ
ரென்னுநன்மதிசற்றேனுமிலர்சிலர்மெய்யேயென்றார்
மன்னுசைவப்பயிர்க்கோர்மழையெனவருநாவல்லார். (உ௪௮)

தாமவைமுழுதுங்கேட்டுத்தரித்திலராகிச்சைவ
மாமலர்மலருஞ்சாலைவைப்பினின்மதிவல்லோர்முன்
னேமமார்விதிவிலக்கினியல்பெலாமெடுத்துக்காட்டிப்
பாமரர்வாயடங்கும்படிபிரசங்கஞ்செய்வார். (உ௪௯)

வைதிகக்கிரியைசொல்லுமறைபொதுவானநூலா
[illegible]றமுத்தியின்பமுதவுறாதுயருந்தீக்கைச்

